# நீளமூக்கு நெடுமாறன்

எழுதியவர் :

**நரா. நாச்சியப்பன்**


**பிரேமா**™



**பிரசுரம்**

59, ஆற்காடு சாலை,
கோடம்பாக்கம்,
சென்னை - 600 024.
தொலைபேசி : 24800325, 24833180, 24811755

E-mail : aruram@md2.vsnl.net.in
Website : www.premapirasuram.com

பிரேமா பிரசுரம் - 226

1952

| | | | |
|---|---|---|---|
| முதற்பதிப்பு | : | மே | 1965 |
| இரண்டாம் பதிப்பு | : | பிப்ரவரி | 1983 |
| மூன்றாம் பதிப்பு | : | ஏப்ரல் | 2000 |
| நான்காம் பதிப்பு | : | அக்டோபர் | 2007 |






விலை

ரூ. 18-00

கணிப்பொறி வடிவமைப்பு : ஏ.ஆர். எண்டர்பிரைசஸ், சென்னை - 24.

அச்சிட்டோர் : காரிஸ் ஆப்செட் பிரஸ், சென்னை - 29



# பொருளடக்கம்





## கதை : ஒன்று



# நீளமூக்கு நெடுமாறன்

கந்தர்வக் கோட்டை இளவரசி மலர்விழி மிகவும் அழகாக இருப்பாள். அவளை மணம் புரிந்து தன் பட்டத்து ராணியாக்கிக் கொள்ள வேண்டுமென்று தேவபுரத்து அரசன் பத்திரகிரி விரும்பினான். ஆனால் இளவரசி மலர்விழி அவனைத் திருமணம் செய்து கொள்ளச் சம்மதிக்கவில்லை. ஏனென்றால், ஒரு மந்திரவாதி அவள் மீது ஒரு மந்திரம் போட்டிருந்தான். அதனால் மலர்விழி திருமணம் செய்து கொள்வதைப் பற்றி நினைக்கவேயில்லை.

பத்திரகிரி ராஜன் மனம் வருந்தி ஒரு தேவதையிடம் சென்று "தாயே! இளவரசி மலர்விழி மனம் மாறி என்னை மணப்பதற்கு என்ன செய்யலாம்?" என்று கேட்டான்.

''இளவரசி மலர்விழியின் அரண்மனை அந்தப்புரத்தில் ஒரு பெரிய பூனை இருக்கிறது. அதன்மேல் அவளுக்கு உயிர். நீ போய் அந்தப் பூனையின் வாலை மிதித்துவிட்டால், மந்திரம் உடைந்துவிடும். பிறகு மலர்விழி உன்னை நேசிப்பாள். உன்னைத் திருமணம் செய்து கொள்ளவும் இணங்குவாள்" என்றாள் தேவதை.

''ஒரு பூனை வாலை மிதிப்பதற்கு யாராவது பயப்படுவார்களா?" என்று கேட்டுவிட்டு பத்திரகிரி ராஜன் வேகமாக இளவரசியின் அரண்மனைக்குச் சென்றான். அவன் அரண்மனையின் அந்தப்புரக் கூடத்திற்குள் நுழைந்தவுடனே, "மியாவ் மியாவ்!" என்று கத்திக் கொண்டே அந்தப் பூனை தாவி வந்து அவன் காலில் உரசிக் கொண்டு நின்றது. பத்திரகிரி ராஜன் அதன் வாலில் காலை வைக்க முயன்றான். ஆனால், அவன் வாலை மிதிக்கக் காலைத் தூக்கிய போதெல்லாம் அந்தப் பூனை மியாவ் மியாவ் என்று கத்தியவாறு சட்டென்று திரும்பிக் கொண்டது.

அன்று முழுவதும் பத்திரகிரி ராஜன் எவ்வளவோ முயன்றான். ஆனால் பூனையின் வாலை மிதிக்க முடியவில்லை. மறு நாளும் காலைத் தூக்கித் தூக்கி வைத்துப் பார்த்தான். ஒரு வாரம் வரை இப்படியே நடந்தது. ஆனால் நடந்த காரியம் ஒரே மாதிரியாகத்தான் இருந்தது. வால் இருக்கும் இடத்திற்கு நேரே பத்திரகிரி ராஜன் தன் காலைத் தூக்கும் போதெல்லாம் பூனை "மியாவ்! மியாவ்!" என்று கிறீச்சிட்டபடி உடனே தன் உடலைத் திருப்பி வாலைத் தூக்கிக் கொண்டுவிடும்.

ஒரு நாள் அந்த "மியாவ் மியாவ்" பூனை தூங்கிக் கொண்டிருந்தது. அதைக் கண்ட பத்திரகிரி ராஜன்

தன் பலம் கொண்ட மட்டும் காலைத் தூக்கி ஓங்கி பூனையின் வாலைக் குறி பார்த்துத் தவறாமல் மிதித்து விட்டான். உடனே பூனை பயங்கரமாகக் கத்திக் கொண்டு துள்ளிப் பாய்ந்தது. அதே சமயத்தில் அது மனித உருவம் அடைந்தது. பூனையாக இருந்தது பொல்லாத மந்திரவாதிதான்! அந்த மந்திரவாதி தன் கண்களில் நெருப்புப் பொறி பறக்க பத்திரகிரி ராஜனை ஏறிட்டு நோக்கி, "என் மந்திரத்தை உடைத்து விட்டபடியால், இதுவரை இளவரசியை மணந்து கொள்ள முடியாமல் இருந்த நீ இப்போது அவளைத் திருமணம் செய்து கொள்ளுவாய்! ஆனால் உன்னைப் பழி வாங்காமல் விட என் மனம் இடங் கொடுக்கவில்லை. உனக்கு ஒரு குமாரன் பிறப்பான். அவன் தன் மூக்கு மிக நீளமாக இருக்கிறது என்பதை அறியும்வரை மிகவும் வருத்தத்தோடு இருப்பான். இது என் சாபம்! இந்த விஷயம் நீ யாரிடமாவது கூறினால், நீ அந்த இடத்திலேயே தலை வெடித்துச் செத்து விழுந்து விடுவாய்!" என்று சபித்தான்.

இதைக் கேட்டு பத்திரகிரி ராஜன் மிகவும் திடுக்கிட்ட போதிலும், மந்திரவாதி மறைந்தவுடன் அவனால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

"எனக்குப் பிறக்கப் போகும் குமாரன் நீண்ட மூக்குடையவனாக இருந்த போதிலும், அவன் குருடனாகவோ அல்லது முடவனாகவோ இருந்தால் ஒழிய அவன் தன் மூக்கின் நீளத்தை அறியாமல் இருக்க முடியாது!"

இவ்வாறு மனத்தைத் திடப்படுத்திக் கொண்ட அரசன், மறுபடியும் திருமணத்திற்கு இளவரசியின் சம்மதத்தைக் கேட்கச் சென்றான். இப்போது மலர்விழி உடனே சம்மதித்து விட்டாள்! ஆனால், அவர்கள் இருவரும் நீண்ட நாள் குடும்பம் நடத்தவில்லை. அதற்குக் காரணம், திருமணமாகி ஒரு வருடத்திற்குள் பத்திரகிரி ராஜன் காலமாகி விட்டான். அவன் சாகும் முன் யாருக்கும் தன் இரகசியத்தைக் கூறவும் இல்லை.

பத்திரகிரி ராஜன் மாண்டுபோன சில நாட்களுக்குப் பிறகு ராணி மலர்விழி ஓர் இளவரசனைப் பெற்றெடுத்தாள். அவனுக்கு நெடுமாறன் என்று பெயர் வைத்தார்கள். உலகத்திலேயே மிகவும் அழகான நீல விழிகளையும், பவள நிற வாயையும் உடையவனாக நெடுமாறன் விளங்கினான். ஆனால், அவனுடைய மூக்கு மட்டும் மிகப் பெரியதாகவும் நீண்டதாகவும் இருந்தது. பாதி முகத்தை அந்த மூக்கே அடைத்துக் கொண்டு விட்டது. இதைக் கண்ட ராணி மலர்விழி பெருங் கவலைக்குள்ளானாள். ஆனால், அவளுடைய தோழிமார்கள் அவளுடைய கவலையைப் போக்குவதற்காக, அந்த மூக்கு அவ்வளவு பெரிதல்ல என்றும் கீர்த்தி பெற்ற வரலாற்றுக் காலத்து ராஜாக்களுக்கெல்லாம் இதைப் போல நீண்ட மூக்குகளே இருந்திருக்கின்றன என்றும் சொல்லிச் சமாதானப் படுத்தினார்கள். இதையெல்லாம் கேட்டு ராணி மலர்விழி ஓரளவு தன் கவலையை மறந்து தன் குழந்தை நெடுமாறனை பேணி வளர்த்து வந்தாள். அவளுக்கு இளவரசன் மேல் அளவற்ற அன்பு இருந்தது. நாளடைவில் அவனுடைய மூக்கு அவளுக்குச் சாதாரணமாகத் தோன்றியது.

இளவரசன் நெடுமாறன் மிகவும் கவனமாக வளர்க்கப்பட்டான். அவனுடைய நீளமான மூக்கைப் பற்றிப் பேசாமல் இருக்க எல்லோருமே கவனம் எடுத்துக் கொண்டார்கள். சின்ன மூக்குடையவர்கள் அடைந்த துன்பத்தைப் பற்றியெல்லாம் அவனுக்குக் கதைகள் கூறப்பட்டது. அரண்மனைப் பெண்கள் தங்கள் ராணியின் மனதைச் சமாதானப் படுத்துவதற்காக மூக்கு நீளமாய் வளரட்டும் என்று தங்கள் பச்சைக் குழந்தைகளின் மூக்குகளை அடிக்கடி இழுத்து இழுத்து விடுவார்கள்.

நீளமூக்கு நெடுமாறன் கல்வி கற்க ஆரம்பித்தான். அவனுடைய ஆசிரியர்கள் சரித்திரத்தில் மிகப் பிரசித்தி பெற்ற அரசர்களைப்

பற்றியும் அரசிகளைப் பற்றியும் சொல்லி அவனுக்கு அரசியல் ஞானம் புகட்டினார்கள். அவனுடைய அறையில் நீண்ட மூக்குடன் கூடிய மாவீரர்களின் படங்கள் பலப்பல மாட்டி வைக்கப்பட்டிருந்தன. நீளமான மூக்குதான் ஒரு மனிதனுக்கு உண்மையான அழகு என்று அவன் எண்ணினான். அதனால் இந்த உலகமே கிடைத்தாலும் அவன் தன் மூக்கின் நீளத்தில் சிறிது கூடக் குறைவதை விரும்பமாட்டான்.

அவனுக்கு வயது இருபது ஆனபோது, அவனுடைய திருமணத்திற்கு ஒரு பெண் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் அவனைப் பார்த்தவர்களுக்கெல்லாம் உண்டாயிற்று. இளவரசிகள் பலரின் உருவப் படங்கள் நெடுமாறனிடம் காட்டப்பட்டன. அப்படங்களிலே வசந்தகுமாரி என்ற இளவரசியின் உருவம் நெடுமாறனுக்கு மிகவும் பிடித்திருந்தது. பல ராஜ்யங்களுக்கு அதிபதியாக விளங்கும் ஒரு பெரிய மகாராஜாவின் மகள்தான் வசந்தகுமாரி! அவள் ஒரே பெண்ணாதலால் அந்த மகாராஜாவின் ராஜ்யத்திற்கும் அவளே வாரிசாக இருந்தாள். அவளுடைய செல்வ நிலையைப் பற்றி இளவரசன் நெடுமாறன் சிறிதும் எண்ணவில்லை. அவளுடைய அழகையே அவன் விரும்பினான்.

ஆனால் வசந்தகுமாரியின் மூக்கு மிகவும் சிறியது! மிகவும் அழகானதும் கூட! ராஜ சபையினருக்கு இது ஏமாற்றத்தையளித்தது. ராஜகுமாரனைச் சந்தோஷப் படுத்துவதற்காக சின்ன மூக்குடையவர்கள் ராஜ சபைக்கு வரும் போதெல்லாம் அனைவரும் வாய் கிழியச் சிரித்து சின்ன மூக்கர்களைக் கேலி பண்ணுவார்கள். அதுபோலவே அவர்கள் வசந்தகுமாரியின் சின்ன மூக்கையும் கேலி செய்து சிரித்தார்கள். நீளமூக்கு நெடுமாறனுக்கு இந்த நிகழ்ச்சி கோபத்தை உண்டாக்கியது. வசந்த குமாரியின் மூக்கைக் கேலி பண்ணிய இரண்டு அதிகாரிகளை அவன் உடனே வேலையிலிருந்து நீக்கிவிட்டான். அதைக் கண்டதும் மற்றவர்கள் இதைக்

கண்டு, இளவரசனின் கருத்துக்கு மாறாக எதுவும் சொல்லாமலிருக்கப் பெரிதும் கவலை எடுத்துக் கொண்டார்கள்.

"ஆண்களுக்குப் பெரிய நீளமான மூக்கு இல்லையென்றால் அவலட்சணமாக இருக்கும் என்பது உண்மை தான். ஆனால் பெண்களுக்குச் சின்ன மூக்குத்தான் சிறப்பளிக்கும்!" என்றும் ஒருவன் கூறினான்.



"உலகப் பிரசித்தி பெற்ற எகிப்து தேசத்து அரசி கிளியோபாட்ரா குறுகிய மூக்குடையவளாகவே இருந்தாள் என சரித்திரக் குறிப்புகள் சொல்லுகின்றன," என்றான் இன்னொருவன். வரவேற்கத்தக்க இவ்வார்த்தைகள் கூறிய நபர்களுக்கு நீளமூக்கு நெடுமாறன் நிறைய வெகுமதிகள் கொடுத்தான்.

தன்னை மணம் புரிந்து கொள்ள வேண்டுமென வசந்தகுமாரிக்கு நெடுமாறன் தூதுக் கோஷ்டி ஒன்றை அனுப்பினான். வசந்தகுமாரி அதற்குச் சம்மதித்துத் தூதுவர்களுடனேயே புறப்பட்டு நெடுமாறனின் நகருக்கு வந்தாள். ஒப்பற்ற பேரழகியாகிய அவளைக் காணப் பொறுமையின்றி நீளமூக்கு நெடுமாறன் வெகு ஆவலோடு காத்திருந்தான். வழியிலேயே அவளைச் சந்திக்கவும் புறப்பட்டான். வழியில் கண்டு, அவளைப் பல்லக்கில் இருந்து இறக்குவதற்காக நெடுமாறன் சென்ற பொழுது, அவனுடைய விரோதியான பழைய மந்திரவாதி திடீரெனத் தோன்றி வசந்தகுமாரியைத் தூக்கிக் கொண்டு மறைந்து விட்டான்.

அதைக் கண்டு நெடுமாறன் அடைந்த வேதனை இவ்வளவு அவ்வளவு அல்ல. ஆனால், அவன் தன் வேதனையை அடக்கிக் கொண்டு இளவரசி வசந்த குமாரியை நாடெங்கும் தேட ஆரம்பித்தான். வசந்த குமாரியை மீட்காமல் அவன் தன் அரண்மனைக்குத் திரும்பவே விரும்பவில்லை.

நெடுமாறன் தன் ராஜ பரிவாரங்களில் யாரும் தன்னுடன் இருக்கக் கூடாதென்று கூறி திருப்பி அனுப்பி விட்டான். குதிரையை அதன் விருப்பப்படி போக விட்டுவிட்டு அது போகும் இடங்களிலெல்லாம் அவன் வசந்தகுமாரியைத் தேடியலைந்தான்.

ஒருநாள் முழுவதும் நெடுமாறன் ஒரு பெரிய சமவெளியில் சென்றான். ஒரு சிறு குடிசை கூட அவனது கண்களுக்குப் புலப்படவில்லை. இரவு

சூழ்ந்தபோது அவனுக்கும் அவனுடைய குதிரைக்கும் பசி தாங்க முடியவில்லை. சிறிது தூரத்தில் ஒரு குகையில் வெளிச்சம் தெரிவதைக் கண்டு நெடுமாறன் அவ்விடத்திற்கு விரைந்து சென்றான்.

அந்தக் குகையினுள் நெடுமாறன் நுழைந்தபோது, அங்கே ஒரு சிறு கிழவி இருப்பதைக் கண்டான். அக்கிழவிக்கு வயது நூறுக்கு மேலிருக்கும். தன் குகைக்குள் யார் வந்திருப்பதென்று பார்ப்பதற்காக அக்கிழவி தன் மூக்குக் கண்ணாடியை எடுத்தாள். அதை அவள் மாட்டிக் கொள்ளச் சிறிது கஷ்டமாக இருந்தது. ஏனெனில் அவளுடைய மூக்கு மிகச் சிறியதாகச் சப்பை மூக்கு போல இருந்தது. அவள் கண்ணாடியை மாட்டிக் கொண்டு நெடுமாறனைப் பார்த்தபோது இருவரும் ஒருவரையொருவர் பார்த்து, "ஆ! என்ன விசித்திரமான மூக்கு!" என்று கூறிச் சிரிக்கலானார்கள்.

"பாட்டீ! உங்கள் மூக்கைப்போல என் மூக்கு அவ்வளவு வேடிக்கையானதல்ல; ஆனால், மூக்கைப் பற்றி நாம் பிறகு பேசலாம். தயவு செய்து ஏதாவது சாப்பிடக் கொண்டு வாருங்கள். என் குதிரைக்கும் தீனி போட வேண்டும். ஏனெனில் எங்கள் இருவருக்குமே பசி காதை அடைக்கிறது." என்றான் நீளமூக்கு நெடுமாறன்.

"இதோ சாப்பாடு போடுகிறேன். உன் மூக்கு விசித்திரமாக இருந்தாலும், என் இறந்த நண்பருடைய மகன் நீ! எனக்கு அவரிடம் அன்பு மிக அதிகம்! அவருடைய மூக்கு அழகாகவும், பலமாகவும் இருக்கும்!" என்றாள் அந்தக் கிழவி. அவள் ஒரு வன தேவதை!

"அப்படியானால் என் மூக்கிற்கு என்ன குறைவு?" என்று கேட்டான் நீளமூக்கு நெடுமாறன்.

"குறையொன்றுமில்லை. கொஞ்சம் அதிகமாகத் தான் இருக்கிறது. அதனால் என்ன வந்துவிட்டது? இன்னும் நீளமான மூக்கு இருந்தாலும் ஒருவன்

நல்லவனாக இருக்க முடியும்! உன் தந்தை என் நண்பர் என்று சொன்னேனல்லவா? உட்கார். அவர் முன்பு அடிக்கடி என்னை வந்து பார்த்துவிட்டுப் போவார். கடைசியாக நானும் அவரும் பேசிக் கொண்ட விஷயங்களை உனக்குச் சொல்கிறேன்!" என்றாள் வனக்கிழவி.

"அம்மா தேவதையே! இன்று முழுவதும் நான் சாப்பிடவேயில்லை. தயவு செய்து முதலில் எனக்கு ஏதாவது சாப்பிடக் கொடுத்துவிட்டுப் பிறகு உங்கள் கதையைச் சொல்லுங்கள். நான் கவனிக்கிறேன்." என்றான் நெடுமாறன்.

"ஐயோ பாவம்! இப்போதே உனக்கு ஏதாவது கொடுக்கிறேன். நீ சாப்பிடும்போதே நான் என் கதையைச் சில சொற்களில் முடித்துவிடுகிறேன். நான் எப்போதுமே அதிகம் பேசுவதில்லை. மூக்கு நீண்டதாயிருந்தாலும் பாதகமில்லை. வாய் நீளக் கூடாது என்பார்கள். நான் சிறுமியாக இருந்தபோது, நான் அதிகம் பேசுவதில்லை. இதற்காக மக்கள் என்னைப் பெரிதும் பாராட்டிப் பேசுவார்கள். அவர்கள் என் தாயிடமே என் வாயடக்கத்தைப் பற்றிப் புகழ்வார்கள். என் தாய் ஒரு மகாராணி! நான் ஒரு ராஜகுமாரி! என் தந்தை..."

"ஏன் உங்கள் அப்பா பசித்தால் சாப்பிடுவதில்லையோ?" என்று கேட்டான் நெடுமாறன் பசி தாங்காமல்.

"நன்றாகச் சாப்பிடுவார்! இதோ உனக்குச் சாப்பாடு கொண்டு வருகிறேன். நான் சொல்ல வந்த விஷயம் என்னவென்றால், என் அப்பா..."

"பாட்டி! நான் சாப்பிடுவதற்கு முன்னால் எதையும் கேட்கப்போவதில்லை! நான் வயிறு நிரம்பாத வரை என் காதுகள் திறக்காது!" என்று நெடுமாறன் சொல்ல வாயெடுத்தான். ஆனால் அவன் சட்டென்று வாயை அடக்கிக் கொண்டான். ஏனெனில், தேவதையின் உதவி அவனுக்குத் தேவையாக இருந்தது!

அதனால் நெடுமாறன் தந்திரமாக, "பாட்டி! நீங்கள் சொல்லப் போகும் விஷயம் என் பசியை மறக்கச் செய்து அடக்கிவிடும். ஆனால், நம் பேச்சைக் கேட்டறிய முடியாத இந்த ஊமைப் பிராணிக்குப் பசி தாங்க முடியாது," என்று பண்பாகச் சொன்னான்.

தன் கதை சொல்லும் திறமைக்கு நெடுமாறன் வழங்கிய பாராட்டுரையைக் கேட்டு வனக்கிழவி மனங்குளிர்ந்து போனாள்

"இளவரசே! இனி நீ சிறிது நேரங்கூட காத்திருக்க வேண்டியதில்லை. உன் மூக்கு மிக நீளமாக இருந்தாலும் நீ நல்ல குணமுடையவனாக இருப்பதால், உன் விருப்பத்தை நிறைவேற்றுவதில் நான் மகிழ்ச்சியே அடைவேன்" என்று சொல்லிவிட்டு வனக்கிழவி வேலைக்காரர்களைக் கூவியழைத்தாள்.

அவள் திரும்பித் திரும்பி தன் மூக்கைப் பற்றியே பேசுவது நெடுமாறனுக்கு எரிச்சல் உண்டாக்கியது. அது தன் நன்மைக்காகத்தான் என்பதை அவனால் உணர முடியவில்லை.

"இந்தக் கிழவி என்ன எப்பொழுது பார்த்தாலும் என் மூக்கு நீளம் நீளம் என்றே சொல்லிக் கொண்டிருக்கிறாள். ஏதோ அவளுக்குக் குறைகிறதை நான் திருடி எடுத்து வைத்துக் கொண்டதாக நினைப்பு போலும். எனக்கு மட்டும் இப்போது பசியாக இல்லாவிட்டால், இந்த வாயாடியை விட்டுப் போயே போய்விடுவேன். இதிலே அவள் தான் மிகக் குறைவாகப் பேசுவதாக வேறு நினைத்துக் கொண்டிருக்கிறாள்!" என்று நெடுமாறன் தனக்குள்ளேயே எண்ணிக் கொண்டான்.

அவன் இவ்வாறு சிந்தனையில் ஈடுபட்டிருக்கும் போதே வனக்கிழவியின் வேலையாட்கள் அவன் எதிரில் சாப்பாடு கொண்டு வந்து பரிமாறினார்கள். நெடுமாறன் தன் பசிதீரச் சாப்பிட்டான். அவன் சாப்பிடும்போது வனக்கிழவி தன் வேலையாட்களிடம்

"அதை வை! இதை வை! தயிர் ஊற்று! பழத்தை உரித்துப் போடு!" என்று கட்டளைகள் இட்டுக் கொண்டேயிருந்தாள்.

நெடுமாறன் தன் வயிறாரச் சாப்பிட்டுக் கொண்டே தனக்குள் இவ்வாறு நினைத்துக் கொண்டான். "இந்த தேவதைக்கு மூக்கு சிறியதாக இருக்கிறது. அதுதான் அழகானது என்று அவளைச் சுற்றியிருப்பவர்கள் புகழ்ந்து பேசியிருக்கிறார்கள். இவள் பெரிய வாயாடியாக இருக்கிறாள். இவள் மிகக் குறைவாகப் பேசுவதாக மற்றவர்கள் பாராட்டி யிருக்கிறார்கள். நான் இங்கு வந்தது நல்லது தான் நம் முன்னால் நம் குறைகளை மறைத்து நம்மைப் பெரிதும் போற்றிப் பேசுகிறவர்கள் உண்மைகளை எவ்வளவு தூரம் நாம் உணராதபடி மறைத்து விடுகிறார்கள் என்பதை அறிந்து கொண்டேன்! இது போன்ற துதிபாடும் புழுகவுரையார்களை இனி நான் என் அருகிலும் அண்டவிடமாட்டேன். உள்ள குற்றத்தை மறைத்து இல்லாத குணங்களை ஏற்றி பாடும் பாதகர்களை என்னிடம் நெருங்க விடமாட்டேன்!" என்று நெடுமாறன் நினைத்துக் கொண்டான்.

ஆனால் பாவம்! அவனுடைய மூக்கைப் புகழ்ந்து சொன்னவர்கள் அவனை எவ்வளவு முட்டாளாக்கி விட்டார்கள் என்பதை அவன் உணரவேயில்லை!

நெடுமாறன் பசிதீரச் சாப்பிட்டு விட்டு "அப்பாடா!" என்று உட்கார்ந்த போது கிழத்தேவதை "இளவரசே! உன் முகத்தைக் கொஞ்சம் அந்தப் பக்கம் திருப்பிக் கொள். உன் மூக்கின் நிழல் என் சாப்பாட்டுத் தட்டில் விழுந்து தட்டில் என்ன இருக்கிறதென்று நான் பார்க்க முடியாமல் செய்கிறது. ஆமாம் போதும், அவ்வளவு போதும்! என்னவோ உன் மூக்கு இருக்கிற நீளம் எனக்கு ஏதோ போல் இருக்கிறது!" என்றாள்.



“பாட்டி, என் மூக்கைப் பற்றியே பேசுவதை நிறுத்திக் கொள்ளுங்கள். அது இருக்க வேண்டியபடி இருக்கிறது. அதைக் குறைத்துக் கொள்ள நான் விரும்பவேயில்லை!” என்றான் நீளமூக்கு நெடுமாறன்.

“ஓகோ! அதைப் பற்றிப் பேசினாலே உனக்குக் கோபம் வருகிறதே! நெடுமாறா! பாவம்! உன்னைக் கோபம் கொள்ளச் செய்ய வேண்டுமென்பது அல்ல என் நோக்கம். நான் உனக்கு நல்லது செய்யவே எண்ணுகிறேன். உன் மூக்கைக் கண்டு என்னால் அதிர்ச்சியடையாமல் இருக்க முடியவில்லை. உனக்குப் பிடிக்கவில்லை என்றால் அதைப் பற்றி நான் மேற்கொண்டு பேசவில்லை. உனக்குச் சப்பட்டையான மூக்குத்தான் இருக்கிறதென்று நான் எண்ணிக் கொள்கிறேன். உண்மையைச் சொல்லப் போனால் உன் மூக்கைக் கொண்டு மூன்று மூக்குகள் செய்யலாம்!” என்றாள் காட்டுக் கிழவி.

அவள் மேலும் தொடர்ந்து தன் மூக்கைப் பற்றியே பேசுவதைக் கேட்ட நெடுமாறன் கோபம் கொண்டு அங்கிருக்கப் பிடிக்காமல் குதிரை மேலேறிக் கொண்டு புறப்பட்டு விட்டான்.

வசந்த குமாரியைத் தேடிக் கொண்டு அவன் சென்ற ஊர்களிலெல்லாம் இருந்த மக்களுக்குப் பைத்தியமோ என்று நெடுமாறன் எண்ணினான். ஏனென்றால் அவன் மூக்கு அதிக நீளமாக

இருப்பதாகவே பேசினார்கள். அவனைப் பார்த்தவர்கள் எல்லாம் அவன் மூக்கைப் பற்றியே பேசிக் கொண்டார்கள். அவனுடைய ராஜ சபையினர், அவ்வளவு திறமையாக, அவன் நம்பும்படியாகப் போதித்து வைத்திருந்தார்கள். அவர்களுடைய புகழ்ச்சிகளைக் கேட்டு மனத்தேறிய நெடுமாறன் தன் மூக்கு உண்மையிலேயே நீண்டது என்பதை உணர முடியவில்லை.

கானகத்துக் குகையில் இருந்த கிழவித் தேவதை தன்னால் முடிந்தவரை அவனுக்கு நன்மை செய்ய முடிவு செய்தாள். அவள் இளவரசி வசந்த குமாரியைத் தேடிப் பிடித்து, நெடுமாறன் செல்லும் பாதையில் ஒரு பளிங்கு மண்டபத்தை உண்டாக்கி அதற்குள் வசந்த குமாரியை அடைத்து வைத்தாள். அந்தப் பளிங்கு மண்டபத்துக்குக் கதவுகளே கிடையாது. ஒரே ஒரு ஜன்னல் மட்டும் இருந்தது.

அந்தப் பளிங்கு மண்டபத்தையும் ஜன்னலில் வசந்தகுமாரியையும் கண்டதும் நெடுமாறனுக்கு ஒரே ஆனந்தமாக இருந்தது. அப்போது அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில் தலைகால் புரியவில்லை. அந்தப் பளிங்கு மண்டபத்தை உடைத்து வசந்த குமாரியை வெளிப்படுத்த அவனுக்குச் சக்தியில்லை.

வசந்தகுமாரி ஒரு புன்சிரிப்புடன் நெடுமாறனை நோக்கி ஜன்னல் வழியாகத் தன் கையை வெளியில் நீட்டினாள். அந்தக் கையை நெடுமாறன் அன்போடு பிடித்து ஆவலோடு தன் நெற்றியில் வைத்துக் கொள்ள முயன்ற போதெல்லாம், அந்தச் செந்தாமரைக் கையில் தன் சிறுவாயை வைத்து அவன் அன்பு முத்தமிடக் குனிந்த போதெல்லாம் முன்னே நீட்டிக் கொண்டிருந்த நீளமான மூக்குத் தடைப்படுத்தியது. அப்போதுதான் முதன் முதலாக நெடுமாறன் தன் மூக்கு அளவுக்கு மீறி நீளமானது என்பதை உணர்ந்தான். அவன் அந்த மூக்கைப் பிடித்து ஒரு பக்கமாக வளைத்துக் கொண்டு அவள்

கையைத் தன் வாயருகிலே கொண்டுவந்து மிகச் சிரமப்பட்டு ஓர் அன்பு முத்தம் கொடுத்து விட்டான்.

"என் மூக்கு மிக நீளமாயிருக்கிறது என்பது உண்மைதான்!"

இந்த வார்த்தைகள் அவன் வாயிலிருந்து வெளிப்பட்ட உடனே அந்தப் பளிங்கு மண்டபம் துண்டு துண்டாய்த் தூள் தூளாய் இடிந்து விழுந்தது. வசந்த குமாரியின் பக்கத்தில் கிழத் தேவதை வந்து நின்றாள்.

"நெடுமாறா! அதை மட்டுமல்ல, நீ எனக்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறாய் என்பதையும் நீ ஒப்புக் கொள்ள வேண்டும். ஏனென்றால் உன்னுடைய நன்மைக்காக நான் எவ்வளவு பாடுபட்டேன் என்பதை நீ தெரிந்து கொள்ள வேண்டும். உன் மூக்கைப் பற்றி நான் எவ்வளவு பேசினாலும் நீ அதை உணரமாட்டாய் என்பது எனக்குத் தெரியும். உன் விருப்பத்திற்குத் தடையாக இருந்தால் ஒழிய அந்த மூக்கின் குறையை நீ உணரமாட்டாய் என்பது என் மனதிற்பட்டது. அதனால்தான் இந்த ஏற்பாடு செய்தேன். நம் உடலையும் உள்ளத்தையும் பொறுத்தவரையில் நம்மிடமுள்ள அவலட்சணத்தை நம் அகங்காரம் மறைத்துக் காட்டுகிறது. அதனால் நாம் ஏமாறுகிறோம்!" என்றாள் கிழத் தேவதை.

இந்த உண்மையை நெடுமாறன் புரிந்து கொண்டான். பிறகு கிழத் தேவதையின் அருளால், அவனுடைய நீளமூக்கு குறுகிக் குறைந்து அழகாக மாறியது. அதன் பிறகு, வசந்த குமாரியை மணம் புரிந்து கொண்டு நெடுமாறன் மன மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தான்.



## கதை : இரண்டு



# இளவரசி சந்திரிகா

உழைப்பாளிகள் நிறைந்த ஆரவார நாட்டில் அசமந்தன் என்னும் மகாராஜாவும் அகங்காரவல்லபி என்னும் மகாராணியும் அரியணை ஏறினார்கள். அவர்கள் தங்கள் அரசாங்கத்தைச் சரிவர நடத்தாததால் நாட்டிலிருந்து பொதுமக்களால் அவர்கள் விரட்டப்பட்டார்கள்.

அதனால் அவர்கள் அயல் நாட்டுக்குச் சென்று தங்கள் முடியையும், ஆடை ஆபரணங்களையும் விற்றுச் சாப்பிட்டு வரலானார்கள். கடைசியில் எல்லாம் தீர்ந்துவிட்டது. அப்போது அசமந்த மகாராஜா அகங்காரவல்லபியைப் பார்த்து, "நாம் நாடு கடத்தப்பட்டு எவ்விதமான ஆதரவுமின்றி

வாழ்ந்து வருகிறோம். நாமும் நம் குழந்தைகளும் பசியின்றி வாழ ஏதாவது வழி செய்ய வேண்டும். அதற்கு என்ன செய்வது என யோசிக்க வேண்டும். எனக்கோ அரசனாக இருப்பதைத் தவிர வேறு எவ்விதமான தொழிலும் வேலையும் தெரியாது. அரசனாக இருப்பது தான் எளிதான வேலை!" என்று சொன்னார்.

அகங்காரவல்லபி சுயநலக்காரி; குயுக்தியுள்ளம் படைத்தவள். அவள் இதைப் பற்றி ஒருவாரம் வரை யோசனை செய்துவிட்டு தன் கணவரான அசமந்த ராஜரிடம், "நாம் கவலைப்பட வேண்டியதில்லை. ஏனென்றால் எனக்கு வலை பின்னத் தெரியும். வலையைக் கொண்டு நாம் மீன்களையும் பறவைகளையும் பிடித்துவிடலாம். உங்கள் முதல் தாரத்துப் பெண்களோ சோம்பேறிகளாக இருக்கிறார்கள். இன்னும் அவர்களிடமிருந்து தாங்கள் அரச வமிசத்தைச் சேர்ந்தவர்கள் என்ற அகங்காரம் போகவில்லை. நம்மிடம் திரும்பிவராதபடி வெகு தூரத்திற்கு அவர்களை நாம் அனுப்பிவிட வேண்டும்," என்றாள்.

இந்த யோசனை அசமந்த ராஜரை மனம் குழம்பச் செய்தது. அவருக்கோ தம் புதல்விகளிடம் பாசம் அதிகம். அவர்களைப் பிரிய அவர் மனம் இடங்கொடுக்கவில்லை. ஆனால் மனைவியோ பேசிப் பேசி அவரைத் தன் யோசனைக்கு இணங்க வைத்துவிட்டாள். அதன்படி பெண்கள் இரண்டு பேரையும் அகங்காரவல்லபி மறுநாளே அழைத்துக் கொண்டு சென்று தான் போதுமென்று நினைக்கின்ற அளவு தூரத்தில் விட்டு விடுவதென்று முடிவு செய்தார்கள். கடைசி மகளான இளவரசி சந்திரிகா தன் பெற்றோர்கள் பேசிக் கொண்டிருந்ததை, மறைந்திருந்து கேட்டுவிட்டாள். ஆகவே அவள், பாலும் சோறும் எடுத்துக் கொண்டு தன் காவல் தெய்வமாகிய தேவதை அருளுடையாளைத் தேடிப் புறப்பட்டாள்.

வழி நடந்து செல்லும்போது அவளுக்குக் களைப்பு அதிகமாகிவிட்டது. அவள் பாதையோரத்தில் இருந்து கொண்டு அழத் தொடங்கினாள். அப்போது ஒரு பெரிய குதிரை தாவியோடி வந்தது. அது சேனமிட்டுக் கடிவாளம் பூட்டப்பட்டிருந்தது. அதன் முதுகில் போர்த்தியிருந்த பட்டாடையில் வைரம் பதித்திருந்தது. அது ஜகஜோதியாய் மின்னியது. அது சந்திரிகாவைக் கண்டவுடன் நின்று அவளருகில் மேய ஆரம்பித்தது. பார்ப்பதற்கு அவளைத் தன் முதுகில் ஏறிக் கொள்ளும்படி அது செய்வது போலிருந்தது.

சந்திரிகா அதன் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு, "குதிரை! குதிரை! என்னை என் காவல் தெய்வம் இருக்குமிடத்திற்குக் கொண்டு செல்கிறாயா? உனக்குக் கொள்ளும் புல்லும் தருகிறேன்!" என்று கேட்டாள்.

அதைக் கேட்டதும் அந்தக் குதிரை சந்திரிகாவின் முன் குனிந்து கொடுத்தது. அதன் மீது சந்திரிகா ஏறிக்கொண்டாள். உடனே குதிரை பாய்ந்தெழும்பி ஒரு பறவையைப் போலப் பறந்து சென்றது. தேவதை அருளுடையாளின் குகைக்கு சந்திரிகாவைக் கொண்டு வந்து சேர்த்தது.

தேவதை அருளுடையாளின் முன்னால் சந்திரிகா மூன்று முறை வீழ்ந்து வணங்கினாள். "அன்னையே! உங்களுக்குப் படைக்கப் பாலும் சோறும் கொண்டு வந்திருக்கிறேன். ஏற்றுக்கொண்டு எனக்கு ஆசி தரவேண்டும்" என்றாள்.

"வா, வா, சந்திரிகா! என் அருகில் வா! நான் உனக்கு ஒரு முத்தம் கொடுக்க வேண்டும்!" என்றாள் தேவதை அருளுடையாள்.

பிறகு அவள் ஒரு தந்தச் சீப்பைக் கொடுத்துத் தன் கூந்தலை வாரும்படி கூறினாள்.

"சந்திரிகா! நீ ஏன் வந்திருக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். உன் அப்பாவும் அம்மாவும்

பேசிக்கொண்டதை நீ ஒட்டுக் கேட்டுவிட்டாய். அவர்கள் உன்னையும், உன் அக்காமாரையும் திரும்பி வரமுடியாத தொலை தூரத்தில் கொண்டு போய்விடப் போகிறார்கள். இதோ இந்த நூற்கண்டை எடுத்துக்கொள். இந்த நூல் எப்போதும் அறுந்து போகாது. உன் சிற்றன்னை உங்களை வீட்டிலிருந்து அழைத்துச் செல்லும்போது இந்த நூலின் ஒரு நுனியை உன் வீட்டு வாசல் கதவில் முடிந்து வை. போகும் வழியில் நூலை விட்டுக்கொண்டே போ திரும்பவும் எளிதாக வழி கண்டுபிடித்து விடலாம்" என்று அந்த தேவதை சொன்னாள்.

பிறகு அத்தேவதை ஒரு நூல் கண்டுடன், பொன்னும் வெள்ளியும் இழைத்து நெய்த ஆடைகளைப் பரிசாகக் கொடுத்து முத்தமிட்டு சந்திரிகாவை மறுபடியும் குதிரையில் ஏற்றிவிட்டாள் குதிரை சில நிமிடங்களில் அவளை அவர்கள் தங்கியிருந்த குடிசைக்கு அருகில் கொண்டுவந்து விட்டுவிட்டது. அன்று இரவு சந்திரிகா தனக்கு தேவதை கொடுத்த வெகுமதிகளைத் தலையணையின் கீழே வைத்துக் கொண்டு படுத்து உறங்கினாள். என்ன நடந்ததென்று அவள் யாருக்கும் சொல்லவில்லை.

மறுநாள் பொழுது விடிந்தவுடன் அகங்காரவல்லபி தன் ஆடைகளை அணிந்து கொண்டு, பெண்களைக் கூப்பிட்டாள்.

முதலில் அசமந்த மகாராஜாவின் மூத்த மகளான காந்தாரி வந்தாள். அடுத்தாற்போல் அடுத்த மகளான மங்கள நாயகி வந்தாள். பிறகு கடைசி மகளான சந்திரிகா வந்தாள்.

"அடி பெண்களே! நேற்று இரவு நான் ஒரு கனவு கண்டேன். அதன்படி என் அக்காள் வீட்டிற்கு நாம் போகவேண்டும். அவள் நம்மை வரவேற்றுபசரித்து நமக்கு நல்ல விருந்து வைப்பாள்!" என்று சொன்னாள் அகங்காரவல்லபி.

இரண்டு பெரிய பெண்களும், தன்னந் தனியாக அந்தக் குடிசையில் ஆடம்பரமின்றி வாழ்ந்து வர நேரிட்டதை எண்ணி வருந்திக் கொண்டிருந்தார்கள். இப்போது அரண்மனைக்குப் போகப் போகிறோம் என்றவுடன் மிகவும் ஆனந்தமடைந்தார்கள். சந்திரிகாவும் ஆனந்தப்படுவதாகக் காட்டிக் கொண்டாள்.

அந்த மூன்று பெண்களும் மறுநாள் காலையில் தங்கள் சிற்றன்னையுடன் புறப்பட்டார்கள். அவர்களில் எல்லோருக்கும் பின்னால் கடைசியாகச் சென்றவள் சந்திரிகாதான். அவள் நூல் கண்டிலிருந்த நூலின் ஒரு முனையை வீட்டுக் கதவில் கட்டிவிட்டு, வழி நெடுகிலும் நூலை விட்டுக்கொண்டே போனாள்! வெகுதூரம் காட்டுக்குள் சென்றபின், அகங்காரவல்லபி இவ்வளவு தூரத்திலிருந்து தன் பெண்கள் திரும்பி வரமுடியாதென்று நினைத்தாள். ஆகவே, அவள் அவர்களைச் சிறிது நேரம் உறங்கிக் களைப்பாறச் சொன்னாள். அவர்களும் நடந்து வந்த அலுப்பால் நன்றாகத் தூங்கிவிட்டார்கள். ஆனால் சந்திரிகா மட்டும் தூங்கவில்லை; தூங்குவதுபோல் பாசாங்கு செய்து கொண்டிருந்தாள். அகங்கார வல்லபி அவர்களை நடுக்காட்டில் அனாதரவாக விட்டுவிட்டு ஓசைப்படாமல் நழுவி தன் வீட்டிற்குத் திரும்பிவிட்டாள்.

பிறகு சந்திரிகா தன் அக்காள்மார்களை எழுப்பி, எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னாள். அவர்கள் அதைக் கேட்டு அழ ஆரம்பித்தார்கள். தங்களைத் திரும்பவும் வீட்டுக்கு அழைத்துச் சென்றால் அவளுக்குத் தங்கள் பொம்மைகளையும் விளையாட்டுச் சாமான்களையும் கொடுப்பதாக வாக்களித்தார்கள். அவர்கள் சொன்னபடி நடக்கமாட்டார்கள் என்று தெரிந்திருந்தும், சந்திரிகா அன்புள்ளம் கொண்டவள் ஆகையால் அவர்களையும் அழைத்துக் கொண்டு திரும்பினாள். நூல் வந்த பாதையைப் பார்த்துக் கொண்டே அவர்கள் தங்கள் தந்தையும் சிற்றன்னையும் இருந்த குடிசைக்குத் திரும்பி வந்து சேர்ந்தார்கள்.

அவர்கள் குடிசையருகில் வந்து சேர்ந்த சமயம், அசமந்த ராஜா தம் மனைவியிடம் "நீ என் சின்னமகள் சந்திரிகாவை மட்டுமாவது திரும்பக் கூட்டிக்கொண்டு வந்திருக்கவேண்டும். மற்றவர்கள் தங்களைத் தவிர வேறு யாரைப் பற்றியும் கவலைப்படுவதில்லை. ஆனால் சந்திரிகா..." என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

அப்பொழுது கதவு தடதடவென்று தட்டப்பட்டது.

"யார் அது?" என்று கேட்டார் அசமந்தராஜர்.

"உங்கள் பெண்கள்"

இதைக் கேட்டதும் அகங்காரவல்லபி நடுங்கிப்போனாள் "கதவைத் திறக்காதீர்கள். இது அவர்களுடைய ஆவிகளாக இருக்கலாம்" என்றாள் அவள்.

அசமந்தராஜரும் அவ்ளைப் போலவே ஒரு பெரிய கோழை. இல்லாவிட்டால் அவர் ஏன் நாட்டைவிட்டு ஓடி வரவேண்டும் "நீங்கள் என் பெண்கள் அல்ல" என்று அவர் சொன்னார்.

"அப்பா! கதவு இடுக்கு வழியாகப் பாருங்கள்; என்னை நீங்கள் அடையாளம் தெரிந்து கொள்ளாவிட்டால் நன்றாக எங்களை அடித்து உதையுங்கள்" என்றாள் சந்திரிகா.

அகங்காரவல்லபி அவர்களைத் திரும்பிப் பார்த்து ஆனந்தப்படுவதுபோல் நடித்தாள். எதையோ மறந்துவிட்டதால் அதை எடுத்துக்கொண்டு போகத் தான்மட்டும் திரும்பி வந்ததாகச் சொன்னாள். மூன்று பெண்களும் அவள் சொன்னதை நம்புவது போல் காட்டிக்கொண்டு படுக்கச் சென்றார்கள். சந்திரிகா தன் அக்காள் இருவரையும் அவர்கள் சொன்னபடி பொம்மைகளும் விளையாட்டுச் சாமான்களும் கொடுக்கும்படி கேட்டாள். உடனே அவர்கள் கோபங் கொண்டு அவளை அடித்தார்கள். அடிவலி தாங்க

முடியாமல் சந்திரிகா அழுது கொண்டேயிருந்தாள். அன்று இரவு அவள் சரியாகத் தூங்கவில்லை. மறுநாள் காலையில் வேறொரு பாதையில் மூன்று பெண்களையும், அழைத்துச் சென்று நிச்சயம் திரும்பி வர முடியாத இடத்தில் விட்டுவிட்டு வருவதாக அசமந்தராஜரிடம் அகங்காரவல்லபி சொல்லிக் கொண்டிருந்தாள். அது சந்திரிகாவின் காதில் விழுந்துவிட்டது.

உடனே சந்திரிகா மெல்லத் தன் படுக்கையில் இருந்து எழுந்தாள். ஓசைப்படாமல் வீட்டைவிட்டு வெளியில் வந்தாள். காட்டுமரங்களில் சில பழங்களைப் பறித்துக் கொண்டாள். தன் காவல் தெய்வத்தைப் பார்க்கப் புறப்பட்டாள். முதலில் அவளை ஏற்றிச்சென்ற அதே அருமையான குதிரை இப்பொழுதும் அவளைச் சுமந்து சென்றது. சில நிமிடங்களில் அவள் தேவதை அருளுடையாள் முன்வந்து நின்றாள். தான் கொண்டு வந்திருந்த பழங்களைத் தேவதைக்குப் படைத்தாள். தேவதை அதற்காக நன்றி கூறித் தானும் சில வெகுமதிகளைச் சந்திரிகாவுக்குக் கொடுத்தாள். பிறகு அவள் சந்திரிகாவைப் பார்த்து, “பெண்ணே, இப்பொழுது உனக்கு ஒரு பை நிறையச் சாம்பல் தருகிறேன். உன் சிற்றன்னை உங்களை நடுக்காட்டில் விட்டுவிட்டு வருவதற்காக உங்கள் வீட்டிலிருந்து அழைத்துச் செல்லும்போது சாம்பலை வழி நெடுகத் தூவிக்கொண்டே போ. அதில் உன் காலடித் தடங்கள் பதிந்திருக்கும். அந்த அடையாளத்தைக் கொண்டு நீ வீட்டுக்குத் திரும்பிவிடலாம். ஆனால், உன் அக்காள்மார்களை உன் கூடக் கூட்டிக்கொண்டு வராதே அவர்கள் பொல்லாதவர்கள். நீ அவர்களை வீட்டுக்கு கூட்டிவந்தால், மறுபடி நான் உன்னைப் பார்க்கவேமாட்டேன்!” என்றாள்.

ஒரு பை சாம்பலையும், ஒரு பெட்டி வைரத்தையும் தேவதையிடமிருந்து சந்திரிகா வாங்கிக் கொண்டு குதிரையேறித் தன் குடிசைக்கு வந்து சேர்ந்தாள்.

மறுநாள் காலையில் அகங்காரவல்லபி தன் பெண்களை அழைத்து, "அப்பாவுக்கு உடம்பு சரியில்லை. அவருக்கு மருந்து கொடுக்கக் காட்டில் இருந்து சில மூலிகைகள் பறித்துக் கொண்டு வரவேண்டும். வாருங்கள். நாம் போய் அந்த மூலிகைகளைத் தேடிப் பறித்துக்கொண்டு வருவோம்" என்று கூறினாள்.

அவ்வாறு சிற்றன்னையோடு போகும்போது, காவல் தெய்வம் சொல்லியபடி சந்திரிகா வழி நெடுகிலும் சாம்பலைத் தெளித்துக் கொண்டு போனாள்.

மறுபடியும் அவர்கள் நடுக்காட்டில் தூங்குகிற சமயம் பார்த்து, அகங்காரவல்லபி அவர்களை அனாதரவாக விட்டுவிட்டு வந்துவிட்டாள். அக்காள் இரண்டு பேரும் அழுத அழுகையைப் பார்க்கப் பொறுக்காமல், சந்திரிகா அவர்களையும் கூட்டிக்கொண்டு தன் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். அசமந்தராஜரும், அகங்காரவல்லபியும் அவர்களைத் திரும்பக் கண்டு பெரிதும் ஆச்சரியப்பட்டார்கள். அவர்கள் இருவரும் அன்று இரவு முழுவதும் பேசிக்கொண்டிருந்து, தங்கள் பெண்களை விரட்டியடிப்பதற்கு வேறொரு திட்டம் வகுத்தார்கள்.

சந்திரிகா, தன் அக்காள்மார்களிடம் தான் தேவதையின் சொல்லை மீறி அவர்களையும் கூடக் கூட்டிக் கொண்டு வந்துவிட்டபடியால், இனிமேல் அந்தக் காவல் தெய்வம் உதவி செய்வாள் என்று எதிர்பார்க்க முடியாது என்றாள்.

"பூ! அந்தக் கிழட்டுத் தேவதை அருளுடையாளுக்கு மட்டும்தான் அறிவு இருக்கிறதா? நம் சிற்றன்னை மறுபடியும் நம்மை நடுக்காட்டில் விட்டு வருவதற்காக நம்மை அழைத்துச் செல்லும்போது நாம் பயறுகளை எடுத்துக்கொண்டு செல்வோம். வழி நெடுக அவற்றைப் போட்டுக் கொண்டே போனால், திரும்பவும் நாம் வழியைக் கண்டு பிடித்துவிடலாம்"

என்று இளைய அக்காள் மங்கள நாயகி சொன்னாள். அது பிரமாதமான யோசனையென்று மூத்தவள் காந்தாரி எண்ணினாள். இரண்டு பேரும் பயறுகளைக் கட்டி வைத்துக் கொண்டார்கள். ஆனால், சந்திரிகா தன்னிடமிருந்த துணிமணிகளையும் வைரப் பெட்டியையும் எடுத்து வைத்துக் கொண்டாள்.

அம் மூன்றுபெண்களுக்காக மூன்று இளவரசர்கள் ஒரு தூர தேசத்தில் காத்துக் கொண்டு இருக்கிறார்கள் என்றும் அவர்களிடம் அழைத்துச் செல்வதாகவும் சிற்றன்னை அகங்காரவல்லபி பொய் சொன்னாள்.

காட்டுக்குள் வெகுதூரம் சென்றபின் களைத்துப்போய் மூன்று பெண்களும் தூங்கும்போது அகங்காரவல்லபி அவர்களை அனாதைகளாக விட்டுவிட்டு ஓடி விட்டாள். அவர்கள் விழித்து எழுந்தபோது அவர்களைக் காட்டிலும் தன் காவல் தெய்வத்திடமே அதிக நம்பிக்கை வைத்திருந்த சந்திரிகா அழலானாள்.

"மூடப் பெண்ணே! வாயை மூடு! நாங்கள் வீடு செல்லும் வழியைக் கண்டு பிடிக்கிறோம். நாங்கள் கேட்கும்வரை நீ எதுவும் யோசனை சொல்ல வேண்டாம்" என்று அவளை காந்தாரி கோபித்துக் கொண்டாள்.

ஆனால் வழியில் போட்டு வந்த பயறுகளைக் காட்டுப் புறாக்கள் கொத்தித் தின்று விட்டபடியால், அவர்களால் வழி கண்டுபிடிக்க முடியவில்லை. மூன்று பெண்களும் துயரத்தோடு அழத் தொடங்கிவிட்டார்கள். அப்போது அவர்களுக்கு சாப்பிட எதுவுமே கிடைக்கவில்லை. ஆனால், ஒரு கொட்டையைக் கண்டார்கள். அந்தக் கொட்டைக்குள்ளிருக்கும் பருப்பை யார் சாப்பிடுவது என்று அவர்களுக்குள் சண்டை ஏற்பட்டது!

கடைசியில் சந்திரிகா, "இதில் இருக்கும் பருப்பு நம்மில் ஒருவருக்குக்கூட ஒருவேளைப் பசியைக்கூட அடக்க முடியாது. ஆகவே இதைத் தரையில் ஊன்றித் தண்ணீர் ஊற்றிவருவோம். இது வளர்ந்த பிறகு நமக்கு நிறையப் பழங்கள் கிடைக்கும்'' என்று சொன்னாள்.

ஆகவே அவர்கள், கிடைத்த இலை தழைகளைத் தின்று கொண்டு அந்தக் கொட்டையை ஊன்றித் தினந்தோறும் தண்ணீர் ஊற்றி வந்தார்கள். மரம் வளர்ந்த பிறகு காந்தாரி அதில் ஏற முயன்றாள். ஆனால் கனம் தாங்காமல் அது வளைந்து கொடுத்தது. அதில் சந்திரிகா மட்டும்தான் ஏறமுடிந்தது. ஆனால், அவள் மேலே ஏறிப் பார்த்தும் எதுவும் தென்படவில்லை. அவர்கள் தொடர்ந்து அதற்குத் தண்ணீர் ஊற்றி வந்தார்கள்! மரமும் தினமும் உயரமாக வளர்ந்தது. ஒரு நாள் சந்திரிகா அந்த மரத்தின் உச்சிக்கு ஏறிக் கொண்டிருந்தபோது, மங்கள நாயகி, காந்தாரியிடம் வந்து, சந்திரிகா வைத்திருந்த அழகான ஆடைகளையும் வைரப் பெட்டியையும் தான் கண்டுபிடித்ததாகக் கூறினாள். அவர்கள் உடனே அந்த வைரப் பெட்டியில் இருந்த வைரங்களை எடுத்துக் கொண்டு அதில் கரிகளை நிரப்பி வைத்து விட்டார்கள். கீழே இறங்கி வந்த சந்திரிகா அவர்கள் மீது சிறிதும் சந்தேகப்படவில்லை. அந்த மரம் எவ்வளவு உயரம்வரை வளரும் என்பதிலேயே அவள் நினைவும் கவனமும் சென்று கொண்டிருந்தன.

ஒருநாள் மரத்தின் உச்சிக்கு ஏறிய சந்திரிகா, "அங்கிருந்து பார்த்தால் ஒரு பெரிய மாளிகை தெரிகிறது என்றும், அதன் சுவர்கள் நீலமணிக் கற்களாலும் மரகதக் கற்களாலும் ஆனவை என்றும் அதன் கூரை முழுதும் வைரமாயிருக்கிறதென்றும் அதன் கோபுரங்களில் தங்கமணிகள் இருக்கின்றன என்றும் காற்றாடிகள் காற்றடிக்கும் திசையில் திரும்பி நிற்கின்றன" என்றும் கூறினாள்.

அவளுடைய அக்காள் இருவரும், தாங்களே மரத்தின் உச்சியில் ஏறிப் பார்க்கும்வரை அதை நம்ப மறுத்து விட்டார்கள்.

அந்த மாளிகையில் செல்வ மிகுந்த இளவரசர்கள் யாரும் இருக்கலாமென்று அவர்கள் எண்ணினார்கள். ஆகவே, சந்திரிகா தூங்கும்போது, அவளுடைய விலையுயர்ந்த ஆடைகளை அவர்கள் இருவரும் அணிந்து கொண்டு, வைரங்களையும் எடுத்து வைத்துக் கொண்டார்கள். தூங்கி எழுந்த சந்திரிகா அவர்களுடைய அலங்காரங்களைக் கண்டு, தனக்கும் ஏதாவது நல்ல ஆடைகள் கொடுக்க வேண்டுமென்றும், தான் ஒரு பிச்சைக்காரியைப் போல் அவ்வளவு பெரிய மாளிகைக்கு வருவது நன்றாக இருக்காது என்றும் கேட்டாள். ஆனால் அக்காள்கள் இருவரும் சிரித்து விட்டு, அவள் மேற்கொண்டு எதுவும் பேசினால், அடிப்பதாக மிரட்டினார்கள். ஆகவே சந்திரிகா ஒரு வேலைக்காரியைப் போல, எவ்விதமான நல்ல ஆடைகளுமின்றி அவர்கள் பின்னால் சென்றாள். அந்த மாளிகைக்குப் போனதும் தாங்கள் இருவரும் உல்லாசமாக இருக்கலாம் என்றும், சந்திரிகாவைச் சமையல் வேலைக்கு வைத்துக் கொள்ளலாம் என்றும், காந்தாரியும் மங்களநாயகியும் வழியில் பேசிக் கொண்டு சென்றார்கள். சந்திரிகா தங்கள் தங்கை என்று யாரும் தெரிந்து கொள்ளாதபடி மிகவும் எச்சரிக்கையாக நடந்து கொள்ள வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டார்கள்.

அவர்கள் அந்த மாளிகையை நெருங்க நெருங்க அது மிகவும் பெரிதாகத் தோன்றியது. அவர்கள் அதன் முன் வாசற் கதவைத் தட்டியபோது ஒரு பயங்கரமான கோர உருவமுடைய கிழவியொருத்தி வந்து கதவைத் திறந்தாள். அவளுடைய அவலட்சணமான முகத்தில், நெற்றியின் நடுவில் ஒரே ஒரு பெரிய கண் இருந்தது. அவள் பதினைந்து அடி உயரமும் முப்பதடி அகலமும் இருந்தாள்.

"பாவிப் பெண்களே! இது இராட்சதனுடைய கோட்டை என்பது உங்களுக்குத் தெரியாதா? அவனுக்கு ஒருவேளை பசியடங்குவதற்கு நீங்கள் மூன்று பேரும் சேர்ந்தாலுங்கூட போதாதே! ஆனால் என் கணவனைவிட நான் நல்லவள். உங்கள் மூன்று பேரையும் ஒரே தடவையில் தின்று விடமாட்டேன். ஆகவே நீங்கள் இன்னும் மூன்று நான்கு நாட்களுக்கு உயிரோடு இருக்கலாம்" என்று அந்த ஒற்றைக்கண் இராட்சசி கூறினாள்.

அதைக் கேட்ட இளவரசிகள் அங்கிருந்து ஓடலானார்கள். ஆனால் இராட்சசியின் கைகள் அவர்களுடையதைப் போல ஐம்பது மடங்கு நீளமாக இருந்தபடியால், அப்படியே மூன்று பெண்களையும் வளைத்துப் பிடித்து மூவரையும் ஒரு நிலவறைக்குக் கொண்டு சென்றாள். பசுமையான சந்திரிகாவை அப்போதே கீரை பொறித்துச் சாப்பிடுவதுபோல் சாப்பிட்டு விட வேண்டுமென்று அந்த அரக்கிக்குத் தோன்றியது. அதற்காக எண்ணெய் எடுத்து வரப்போனாள். அப்போது இராட்சதன் வருகிற சப்தம் கேட்டது. மூன்று பெண்களையும் அவனுக்குத் தெரியாமல் தானே சாப்பிட எண்ணிய இராட்சசி அவர்களை ஒரு தொட்டியில் போட்டு மூடிவைத்தாள். அந்தத் தொட்டியின் பக்கவாட்டில் இருந்த துவாரத்தின் வழியாகப் பார்த்த போது அந்த இராட்சசியைப் போல் ஆறு மடங்கு உயரமுள்ள ஒரு பெரிய இராட்சதனை மூன்று பெண்களும் கண்டார்கள். அவனுடைய பேச்சுக்குரலின் ஓசையில் அந்த மாளிகை முழுவதும் அதிர்ந்தது. அவனுக்கும் நெற்றியின் நடுவில் ஒரே ஒரு பெரிய கண்தான் இருந்தது. அவன் ஒரு நீண்ட தடிக்கம்பை ஊன்றுகோலாகப் பிடித்திருந்தான். காற்றை மூக்கினால் இழுத்துப் பார்த்த அந்த இராட்சதன் தன் மனைவி தனக்குத் தெரியாமல் சில குழந்தைகளை மறைத்து வைத்திருப்பதைக் குறிப்பிட்டுக் கோபித்துக் கொண்டான்.

“இங்கே குழந்தைகள் யாரும் இல்லை! இரண்டொரு வினாடிகளுக்கு முன் நான் உரித்துத் தின்ற ஒரு மந்தை ஆடுகளின் கரிவாசம்தான் வீசுகிறது” என்றாள் அவன் மனைவியான இராட்சசி.

ஆனால், அவள் சில குழந்தைகளை ஒளித்து வைத்திருக்கிறாள் என்று இராட்சதன் நிச்சயமாகத் தெரிந்து கொண்டான். அதைத் தெரிந்து கொண்ட இராட்சசி பயந்து போய்க் கடைசியில் உண்மையை ஒப்புக் கொண்டு விட்டாள். ஆனால், “இந்தப் பெண்களை நாம் வீட்டு வேலை பார்ப்பதற்கு வைத்துக் கொள்ளலாம். அவர்கள் நமக்குச் சமைத்துப் போடவும் குற்றேவல் வேலை செய்யவும் பயன்படுவார்கள். அவர்களைச் சாப்பிடவேண்டாம்” என்று வேண்டிக் கொண்டாள்.

சிறிது நேரம் இராட்சதனும் இராட்சசியும் சண்டை போட்டுப் பேசிக் கொண்டார்கள். முதலில் இராட்சதன் மூன்று பெண்களையும் உடனே சாப்பிட்டுவிட வேண்டும் என்றான். பிறகு இரண்டு பேராவது வேண்டும் என்றான். பிறகு ஒரே ஒரு பெண்ணையாவது தின்று சுவைக்க வேண்டும் என்றான். ஆனால் அவன் மனைவி பேசிப் பேசிக் கடைசியாக ஒருவரையும் சாப்பிடாமல் இருக்கும்படி ஒப்புக் கொள்ள வைத்தாள்.

அதன் பிறகு அப் பெண்களைப் பார்க்க வேண்டும் என்று இராட்சதன் சொன்னான். பெண்கள் மூவரும் தொட்டியைவிட்டு வெளியில் நகர்ந்து வந்து அவன் எதிரில் நடுநடுங்கிக் கொண்டே நின்றார்கள். அவர்களுக்குச் சமைக்கவும், வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்ளவும் தெரியுமா என்று இராட்சதன் கேட்டான். அவர்கள் எல்லா வேலைகளும் செய்யத் தெரியும் என்றும் பிரமாதமாகச் சமைக்கத் தெரியும் என்றும் கூறினார்கள். உடனே சமைக்கும்படி சந்திரிகாவிடம் இராட்சதன் சொல்லிவிட்டு சட்டி காய்ந்து விட்டது என்பதை அவள் எப்படி தெரிந்து கொள்ளுவாள் என்று கேட்டான்.

“மகா பிரபோ! எனக்கு நன்றாகச் சமைக்கத் தெரியும்! சட்டியில் கொஞ்சம் வெண்ணெயைப் போட்டு அதை நாவிலிட்டுச் சுவைத்துப் பார்த்து அதன் சூட்டைக் கண்டு பிடிப்பேன்” என்றாள் இளவரசி சந்திரிகா.

“சரி நெருப்பை மூட்டி, உடனே சமைக்கத் தொடங்கு!” என்று இராட்சதன் கட்டளையிட்டான்.

காந்தாரியும் மங்களநாயகியும் பூரி சுடுவதற்காக மாப்பிசைந்து கொண்டிருந்தார்கள். சந்திரிகா இருப்புச் சட்டியைக் கொதிக்க வைத்துக் கொண்டிருந்தாள். அதற்குள் இராட்சதன் நூறு ஆடுகளையும், நூறு பன்றிக் குட்டிகளையும் உரித்துச் சாப்பிட்டு விட்டான். இருந்தும் அவன் பசியடங்காமல், சந்திரிகாவைப் பார்த்து, “இன்னுமா சட்டி காயவில்லை?” என்று கத்தினான்.

சந்திரிகா ஆயிரம் ராத்தல் வெண்ணெயைச் சட்டியில் போட்டு விட்டு, “மகாபிரபோ! வழக்கம்போல் நான் இந்த வெண்ணெயைத் தொட்டு தொட்டு நாவிலிட்டுப் பார்த்தால் சொல்லிவிடுவேன். ஆனால், சட்டி எனக்கு எட்டவில்லையே! வெண்ணெய் எனக்கு எட்டாத ஆழத்தில் அல்லவா உருகிக் கொண்டிருக்கிறது?” என்று பதிலளித்தாள்.

“எனக்கு வெண்ணெய் எட்டும்! நானே பார்க்கிறேன்” என்று சொல்லிக் கொண்டே நாக்கை நீட்டிக் கொண்டு சட்டியினுள் குனிந்தான் இராட்சதன். அவன் குனிந்த வேகத்தில் ஒரேயடியாக அவன் முகம் சட்டியில் கொதித்துக் கொண்டிருந்த நெய்க்குள் அமுங்கி விட்டபடியால் அப்படியே முகம் வெந்து கருகிச் சாம்பலாகி விட்டான். எதற்காகவோ நிலவறைக்குச் சென்று திரும்பி வந்த இராட்சசி தன் கணவன் கருகி முண்டமாய் போனதைக் கண்டு நெஞ்சு உருகி வருத்தப்பட்டாள். ஆனால், மூன்று இளவரசிகளும் சேர்ந்து அவளுக்கு ஆறுதல்

கூறினார்கள். அவள் உடுத்தியிருக்கிற கரடித்தோல் சேலையை அவிழ்த்து எறிந்துவிட்டு அழகான பட்டுச்சேலையுடுத்திக் கொண்டால் இன்னும் நல்ல இராட்சதன் ஒருவனைக் கணவனாகப் பெறலாம் என்று யோசனை கூறினார்கள். அதைக்கேட்டு ஒற்றைக் கண் இராட்சசி களிப்படைந்தாள். பிறகு மூன்று பெண்களும் அவளுக்கு சீவிச் சிங்காரித்து அழகு படுத்துவதாகச் சொன்னார்கள். அவள் கீழே உட்கார்ந்தாள். மூன்று இளவரசிகளும் சீப்புகளை எடுத்துக்கொண்டு அவள் முதுகுப் பக்கம் போனார்கள். மற்ற இரு சகோதரிகளும் இராட்சசிக்குச் சீவிக் கொண்டிருக்கும்போது சந்திரிகா ஓசைப் படாமல் ஒரு கோடாரியை எடுத்து வந்து அந்த இராட்சசியின் முதுகில் ஓங்கிப் போட்டு அவளை இரண்டாக பிளந்து விட்டாள்.

இவ்வாறு இராட்சதனிடமிருந்தும் அவனுடைய கொடிய மனைவியிடமிருந்தும் தப்பிய மூன்று பெண்களும் ஆடிப்பாடிக் கொண்டே அந்த மாளிகையைச் சுற்றி சுற்றி வந்தார்கள். அன்று இரவு பட்டு மெத்தைகளில் ஏறிப்படுத்துத் தூங்கினார்கள். காந்தாரியும், மங்கள்நாயகியும், "அப்பா அம்மாவுடன் இருந்ததைவிட நாம் இப்போது பணக்காரிகளாகி விட்டோம். நாம் இனி அழகாக உடுத்திக் கொண்டு அருகில் உள்ள நகரங்களுக்குச் சென்று நம் செல்வத்தையும் சிங்காரத்தையும் வெளிக்காட்டி அருமையான கணவர்களைத் தேடித் திருமணம் செய்து கொள்ள வேண்டும்'' என்று பேசிக் கொண்டார்கள். ஆனால் சந்திரிகா மட்டும் அந்த மாளிகையிலேயே இருந்து வேலைகளைப் பார்த்துவர வேண்டுமென்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்கள்.

ஒவ்வொரு நாளும் சந்திரிகா, மாளிகையைக் கூட்டிப் பெருக்கி மெழுகித் துடைத்து, சோறாக்கிச் சமைத்து பாத்திரங்களை விளக்கிக் கழுவி வைப்பாள். அவள் அக்காள்மார்களோ, தாங்கள் புதிது புதிதாகப் போய்ப் பார்த்து வந்த நகரங்களைப் பற்றியும், அங்கு

கண்ட மக்களைப் பற்றியும், கதையளப்பார்கள். பெரிய பணக்காரர்கள் வீட்டுக்கு அவர்கள் விருந்துக்குப் போய் வந்ததைப் பற்றியும் அங்கு வந்திருந்த இளவரசன் ஒருவன் தங்களைக் கவனித்ததைப் பற்றியும் பெருமையாகச் சொல்லுவார்கள். அதையெல்லாம் கேட்டுப் பாவம் சந்திரிகா பெருமூச்செறிவாள். அவளை ஒரு வேலைக்காரியைப் போல் நடத்தியதோடு அவளை முன்னைக் காட்டிலும் மோசமாகவும் வெறுப்பாகவும் அக்காள்கள் இருவரும் நடத்தலானார்கள்.

ஒரு நாள் மாலை சந்திரிகா அடுப்பருகில் உள்ள கரிக்குவியலின் மேல் உட்கார்ந்திருந்தபோது கரித்துண்டுகளின் நடுவில் ஒரு சிறு சாவியைக் கண்டாள். அது கரிப்பிடித்துப் பழையதாய் இருந்தது. ஆனால், தேய்த்துக் கழுவிப் பார்த்தபோது சுத்தமான தங்கத்தினால் செய்யப்பட்ட சாவியாகத் தோன்றியது. உடனே சந்திரிகா அம்மாளிகை முழுவதும் ஓடியோடி அது சேரக் கூடிய பூட்டு எங்கேயிருக்கிறதென்று தேடினாள்.

கடைசியில் அவள் ஒரு பெட்டகத்தை கண்டுபிடித்து அதைத் திறந்து பார்த்தபோது அதற்குள், நகைகளும், வைரங்களும், பலவகையான உடுப்புகளும், சேலைகளும் இருப்பதைக் கண்டாள். தான் கண்டு பிடித்ததை அவள் தன் சகோதரிகளுக்குச் சொல்லவில்லை. மறுநாள் அவர்கள் மாளிகையை விட்டு வெளியேறும்வரை சந்திரிகா காத்திருந்தாள். பிறகு அவள் அந்தப் பெட்டகத்திலிருந்து மிகவும் அழகான ஆடைகளையும், நகைகளையும் எடுத்து அணிந்து கொண்டாள். அப்போது அவளிடம் ஏற்பட்ட ஒரு மினு மினுப்பு, சூரியனும், சந்திரனும் சேர்ந்துவந்தால் ஏற்படக்கூடிய ஒளியைக் காட்டிலும் மிகப் பிரகாசமாக இருந்தது. பிறகு அவளும் அடுத்த நகரத்திலுள்ள கலைமாளிகையின் விருந்துக்குச் சென்றாள். அவள் அணிந்திருந்த ஆடைகள் அவளை மிகவும் அழகுடையவளாக்கி விட்டபடியால் அந்த

விருந்திற்கு வந்திருந்த அவளுடைய சகோதரிகள் அவளை அடையாளம் கண்டு கொள்ளவில்லை. விருந்துக்கு வந்திருந்த எல்லோருடைய கண்களும் சந்திரிகாவின் மேலேயே பதிந்திருந்தன. விருந்து நடத்திய வீட்டுக்காரி அவளை வரவேற்று உபசரித்து, அவள் பெயரைக் கூறும்படி கெஞ்சிக்கேட்டுக் கொண்டாள். அதற்கு சந்திரிகா, .தன் பெயர் சுந்தரியென்று மாற்றிச் சொன்னாள். அவளுடைய சகோதரிகளுங்கூட அவள் மீது பொறாமை கொண்ட போதிலும் மற்றவர்கள் போலவே அவளைப் புகழ்ந்து பாராட்டிப் பேசினார்கள். அவள் யார் என்று அவர்கள் தெரிந்து கொள்ளவேயில்லை.

விருந்து முடிந்ததும் அவர்களுக்கு முன்னாலேயே சந்திரிகா தன் வீட்டுக்குத் திரும்பி வந்து விட்டாள். அக்காள்கள் இருவரும் வீட்டுக்குத் திரும்பி வந்தவுடன், சந்திரிகாவிடமே "அடியே சந்திரிகா, இன்று நாங்கள் ஓர் அழகான இளவரசியைப் பார்த்தோம். அவள் பெயர் சுந்தரியாம்! அவளது உடல் பனிபோல் வெண்மையாயிருந்தது. அவள் கன்னங்கள் ரோஜாப் பூப்போல் சிவந்திருந்தன உன்னைப் போல் ஓர் அவலட்சண மனிதக் குரங்காக அவள் இல்லை. அவள் எவ்வளவு அழகாக இருந்தாள்! அவள் அணிந்திருந்த பொன்னும் வைரமும்தான் அவள் உடம்புக்கு எவ்வளவு அழகாக இருந்தன!" என்று புகழ்ந்து சொன்னார்கள்.

"நான் அப்படித்தான் இருந்தேன்!" என்று தன் வாய்க்குள் சொல்லிக் கொண்டாள் சந்திரிகா.

"என்ன முணு முணுக்கிறாய்?" என்று அவர்கள் கேட்டதற்கு சந்திரிகா, "ஒன்றுமில்லை" என்று சொல்லி விட்டாள். ஒவ்வொரு நாளும் அவள் புதுப்புது ஆடைகளையும் அணிகளையும் எடுத்து அணிந்து கொண்டு தன் சகோதரிகள் அறியாமலேயே விருந்துக்குப் போய் வந்தாள். ஒருநாள் அவள் தன் சகோதரிகளுக்கு முன்னால் வீட்டுக்கு வந்துவிட

வேண்டுமென்று வெகு அவசரமாகத் திரும்பிக் கொண்டிருந்தபோது வழியில் அவளுடைய காற்செருப்பு ஒன்று நழுவி விழுந்துவிட்டது. அது பவழத்தால் பூவேலை செய்து செம்பட்டினால் உருவாக்கப்பட்ட செருப்பு.

இருட்டில் அதைத் தேடிக் கொண்டிருந்தால் நேரமாகிவிடுமென்று சந்திரிகா ஒற்றைச் செருப்புடனேயே தன் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள்.

மறுநாள் அந்த ஊர் அரசரின் மகனான இளவரசன் சுந்தராங்கதன் வழியில் கிடந்த சந்திரிகாவின் ஒற்றைச் செருப்பைக் கண்டெடுத்தான். அதன் அழகு அவனைக் கவர்ந்தது. அந்த வினாடியிலிருந்து அவன் அந்தச் செருப்பைத் தன் கையிலேயே வைத்துக்கொண்டான். அன்று முதல் இளவரசன் சுந்தராங்கதன் எதுவும் சரியாகச் சாப்பிடாமல் நாளுக்கு நாள் மெலிந்து வந்தான். அரசனும், அரசியும் தங்கள் மகன் மீது மிக அன்புடையவர்கள். அவர்கள் மருத்துவர்களைக் கூட்டிவந்து காண்பித்தார்கள். ஆனால் அவர்கள் தங்களால் வைத்தியம் செய்யக்கூடிய நோயல்ல இது என்று சொல்லிவிட்டார்கள். ஆகவே, இளவரசன் யாரோ ஓர் அழகி மீது ஆசை கொண்டு விட்டான் என்று தீர்மானித்தார்கள்.

மிக மிக அழகான அரச குடும்பத்துப் பெண்களையெல்லாம் அரசி வரவழைத்து சுந்தராங்கதனுக்குக் காட்டி அவன் விரும்புகிற பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுப்பதாகச் சொன்னாள். ஆனால் இளவரசன் எந்த அரசகுலப் பெண்ணையும் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

"மகனே! உன் மனத்தில் இருப்பதைச் சொல். அவள் ஓர் ஆட்டிடைச்சியாக இருந்தாலும் உனக்குத் திருமணம் செய்து வைக்கிறேன்" என்றாள் அரசி.

அதன் பிறகுதான் இளவரசன் சுந்தராங்கதன் தான் எடுத்து வைத்திருந்த அழகான செருப்பைத் தன் தாயிடம் எடுத்துக் காட்டினான்.



"அம்மா என் நோய்க்குக் காரணம் இதுதான். வேட்டைக்குப் போகும்போது ஒருநாள் இதைக் கண்டெடுத்தேன்! எந்தப் பெண்ணுடைய காலுக்கு இது சரியாக இருக்கிறதோ அவளைத்தான் நான் திருமணம் செய்துக் கொள்வேன்!" என்றான்.

''மகனே! அந்தப் பெண்ணைத் தேடிக் கண்டுபிடிக்கச் செய்கிறேன்" என்றாள் அரசி.

அன்றே நாடெங்கும் நகரெங்கும் அரசக் கட்டளை பறைசாற்றப்பட்டது. அந்த நாட்டில் உள்ள ஒவ்வொரு பெண்ணும் அரண்மனைக்கு வந்து இளவரசன் கையில் உள்ள செருப்பைத் தங்கள் காலில் போட்டுப் பார்க்க வேண்டுமென்று முரசறையப்பட்டது. ஒருவர் பின் ஒருவராக வந்து பெண்கள் பலர் அந்தச் செருப்பைக் காலில் போட்டுப் பார்த்தார்கள். ஆனால் அந்தப் பவழப்பூ பின்னிய பட்டுச் செருப்பு யாருடைய காலுக்கும் சரியாக இல்லை.

ஒருநாள் காந்தாரியும் மங்களநாயகியும் எப்போதையும் காட்டிலும் அதிக அழகாகத் தங்களை அலங்கரித்துக் கொண்டார்கள்.

"நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று சந்திரிகா கேட்டாள்.

"இளவரசர் கண்டெடுத்த ஒரு செருப்பைக் காலில் மாட்டிப் பார்க்கப் போகிறோம். அது எந்தப் பெண்ணின் காலுக்கு பொருந்துகிறதோ அந்தப் பெண்ணையே இளவரசர் திருமணம் செய்துக் கொள்ளுவாராம்!" என்று அவர்கள் சொன்னார்கள்.

"அப்படியானால் நானும் வரட்டுமா?" என்று கேட்டாள் சின்னவள் சந்திரிகா.

"நீயா? அற்பக் கழுதையே! பேசாமல் போய் வீட்டு வேலைகளைப் பார்த்துக் கொண்டு இங்கேயே கிட!" என்று மூத்த பெண்கள் இருவரும் அவளை அதட்டி அடக்கினார்கள்.

அவர்கள் சென்ற பிறகு சந்திரிகா தானும் அழகாக ஆடையணிந்து கொண்டு இளவரசனின் அரண்மனைக்குப் போவதென்று தீர்மானித்தாள். ஆனால், அவள் சேலையுடுத்திச் சீவி சிங்காரித்துப் பொட்டிட்டுக் கொண்டு புறப்படத் தயாரான போதுதான், எந்த இடத்தில் இந்தச் செருப்புப் போட்டுப் பார்க்கிறார்கள் என்று தனக்குத் தெரியாதே என்று யோசித்தாள். அப்போது முன்பு இருமுறை தேவதை அருளுடையாளிடம் அவளை ஏற்றிக் கொண்டு சென்ற அதே மாயக்குதிரை அவள் முன்னே வந்து நின்றது.

"நீ என் காவல் தெய்வத்திடமிருந்து வருகிறாய் என்பது எனக்குத் தெரியும். என்னை எங்கு கொண்டு செல்லவேண்டும் என்பது உனக்குத் தெரியும்!" என்று சந்திரிகா சொல்லியவாறு அந்தக் குதிரையின் மேல் ஏறிக் கொண்டாள். குதிரை உடனே தாவிக் குதித்துப் புறப்பட்டது.

வழியில் சென்று கொண்டிருந்த காந்தாரியும், மங்களநாயகியும் குதிரைச் சத்தத்தையும் அது ஓடும் போது ஒலித்த மணியோசையையும் கேட்டு, யார் அப்படி வருவது என்று பார்ப்பதற்காகத் திரும்பினார்கள். அது தங்கள் தங்கையாக இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள்!

"பார்த்தாயா? அவள் சந்திரிகாதான்!" என்று வியப்புடன் கூறினாள் காந்தாரி. ஆனால் சந்திரிகா சிரித்துக்கொண்டே குதிரை மீது சென்றாள். பாதையில் ஒரு பள்ளத்தில் கிடந்த சேறு கலந்த நீரைக் குதிரை தன் பின்னங்காலால் பொறாமைக்காரிகள் இருவரின் மீதும் வாரியடித்துவிட்டுப் பறந்து சென்றது.



அவர்களால் தங்கள் கண்களையே நம்ப முடியவில்லை. தங்கள் தங்கை சந்திரிகாவின் அற்புதமான அலங்காரத்தைப் பற்றியும், அவளுக்கு கிடைத்த கம்பீரமான குதிரையைப்பற்றியும் அவர்கள் ஆச்சரியப்பட்டுப் பேசிக் கொண்டிருந்த போதே சந்திரிகா அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்து விட்டாள்.

அவளையும் அவள் அழகையும் பார்த்தவர்கள் அவள் ஒரு பெரிய நாட்டை ஆளும் பேரரசி என்றே

நினைத்தார்கள். வழியில் நின்ற படைவீரர்கள் அவளைக் கண்டவுடன், அணிவகுப்பு மரியாதை செய்தார்கள்; காவலர்கள், கைதூக்கிச் சலாம் செய்தார்கள். வீரர்கள் முரசு கொட்டினார்கள். கோட்டை வாசற் கதவுகள் அவளைக் கண்டவுடன் எவ்விதமான கேள்வியுமில்லாமல் உடனடியாகத் திறந்தன.

சந்திரிகா நேராகச் சென்று இளவரசன் நோயாகப் படுத்திருக்கும் அறையினுள் நுழைந்தாள். அங்கேயிருந்த செருப்பைத் தன் ஒற்றைக் காலில் போட்டுக் காண்பித்து, தன் வசமிருந்த அதன் ஜோடியையும் மற்றொரு காலில் போட்டுக் கொண்டு, அதற்குரியவள் தான்தான் என்பதை மெய்ப்பித்துக் காட்டினாள்.

“இளவரசர் சுந்தராங்கதர் நீடூழி வாழ்க! அவரை மணந்து எங்கள் அரசியாகப் போகும் இளவரசி நீடூழி வாழ்க!” என்று அங்கிருந்தவர்கள் கூவினார்கள்.

அவளைக் கண்ட இளவரசன் சுந்தராங்கதன் அப்படியே மயங்கிப் போய்விட்டான். அவன் எதிர்பார்த்ததைக் காட்டிலும் சந்திரிகா அழகாக இருந்தாள். சுந்தராங்கதன் எழுந்து வந்து சந்திரிகாவின் கையை அன்போடு பற்றிக் கொண்டான். அப்போதே அவனுடைய நோய் முழுவதும் பறந்து போய்விட்டது. சந்திரிகாவை அரசி தன் மார்போடு சேர்த்து அணைத்துக் கொண்டாள். “என் மகனைக் காப்பாற்றிய நீயும் எனக்கொரு மகள்தான். ஆனால் மருமகள்!” என்று ஆனந்தத்தோடு கூறினாள். அதிசயமான வெகுமதிகளையும் பரிசுகளையும் கொண்டு வந்து அவளுக்குக் கொடுத்தார் அந்த நாட்டின் அரசர். இந்த இன்ப நிகழ்ச்சியை நாடெங்கும் அறிவிக்கப் பீரங்கிகள் வெடி முழக்கமிட்டன. எங்கும் சங்கீத இன்பநாதம் எழும்பியது. அந்த நாட்டில் இருந்த ஆடவர் பெண்டீர் அனைவரும் ஆனந்தக் கூத்தாடினார்கள்.



இளவரசன் சுந்தராங்கதனைத் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்று அவளிடம் எல்லோரும் கேட்டுக் கொண்டார்கள்.

"முதலில் என் கதையைக் கேளுங்கள்" என்று சந்திரிகா தன் வரலாற்றைச் சொன்னாள். அவள் அரச குலத்தில் பிறந்த ஓர் இளவரசி என்பதையறிந்ததும், இளவரசனின் பெற்றோர்கள் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள். அவளுடைய தந்தையின் நாட்டை அந்த அரசர்தான் ஆண்டு வந்தார். அந்த நாட்டை தன் தந்தைக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்று சந்திரிகா கேட்டுக் கொண்டாள். அதற்கு அவர்கள் ஒப்புக் கொண்ட பிறகு அவளும் திருமணத்திற்கு ஒப்புக் கொண்டாள்.

அந்தச் சமயத்தில் சந்திரிகாவின் சகோதரிகளான காந்தாரியும் மங்கள நாயகியும் அங்கு வந்து சேர்ந்தார்கள். சந்திரிகாவின் காலுக்கு அந்தச் செருப்பு சரியாக இருந்தது என்பதையும் அவள் இளவரசனைத் திருமணம் செய்து கொள்ளப் போகிறாள் என்பதையும் கேட்டவுடனே அவர்கள் அங்கிருந்து நழுவத் தொடங்கினார்கள். ஆனால்,

அவர்களைத் தன் முன் அழைத்து வரும்படி சந்திரிகா கட்டளையிட்டாள். வீரர்கள் அப்பெண்கள் இருவரையும் பிடித்து வந்து அவள் முன் நிறுத்தினார்கள். அவர்களை சந்திரிகா கண்டிக்கவுமில்லை; தண்டிக்கவுமில்லை; கட்டித் தழுவிக் கொண்டாள்! அரசியிடம் அவர்களை அறிமுகப்படுத்தி, "இவர்கள் என் அருமை அக்காமார்கள்! இவர்கள் நல்லவர்கள் என்னை நேசிப்பது போலவே இவர்களையும் நீங்கள் அன்பாக நேசிக்க வேண்டும்!" என்று கேட்டுக் கொண்டாள்.

தங்கை சந்திரிகாவுக்கு தாங்கள் எவ்வளவோ கெடுதல் செய்திருந்தும் இவ்வளவு நல்ல குணத்தோடு தங்களை சந்திரிகா நடத்துவதைக் கண்டு இரு சகோதரிகளும் திகைத்தார்கள். அவர்கள் ஒரு வார்த்தை கூடப் பேச முடியாமல் பிரமித்தபடியே நின்றார்கள். தங்கள் தாய் தந்தையருக்கு நாடு திரும்பி கிடைக்கப் போகிறதென்றும், அவர்கள் திரும்பிச் சென்று அவர்களோடு இருக்கலாமென்றும் சந்திரிகா தெரிவித்த போது அவர்கள் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள்.

இளவரசி சந்திரிகாவுக்கு நடந்த திருமணம் போல் வேறு எந்தத் திருமணமும் அவ்வளவு சிறப்பாக நடந்தது கிடையாது. அதன் சிறப்பை விளக்கிச் சந்திரிகா தன் காவல் தெய்வமாகிய தேவதை அருளுடையாளுக்கு ஒரு கடிதம் எழுதினாள். அந்தக் கடிதத்துடன் தன் அன்புக் காணிக்கையாகப் பல அரிய பொருட்களையும் அதே மாயக் குதிரை மூலமாகத் தேவதை அருளுடையாளுக்கு அனுப்பி வைத்தாள். அதோடு தன் பெற்றோரைக் கண்டு அவர்களைத் தங்கள் நாட்டுக்குத் திரும்பிச் செல்லும்படி சொல்ல வேண்டுமென்று அவள் அந்தத் தேவதையை வேண்டிக் கொண்டாள்.

தேவதை அருளுடையாள் இளவரசி சந்திரிகா விரும்பியதையெல்லாம் செய்து முடித்தாள். அவளுடைய பெற்றோர்கள் தங்கள் நாட்டுக்குத்

திரும்பி அதை ஒழுங்காகவும் சிறப்பாகவும் குடிமக்கள் மகிழ்ச்சியடையும்படியாகவும், பகைவர்கள் அதிர்ச்சியடையும்படியாகவும் ஆண்டு வரத் தொடங்கினார்கள். இளவரசி சந்திரிகா இளவரசன் சுந்தராங்கதனுடன் இன்பமாக இல்லறம் நடத்தினாள். அவளுடைய சகோதரிகளுக்கும் தகுந்த இளவரசர்களைப் பார்த்து அவர்களுடைய பெற்றோர் திருமணம் செய்து வைத்தார்கள். எல்லோரும் ஆனந்தமாக வாழ்ந்து வந்தார்கள்.

---

## கதை : மூன்று

---



# கறுப்புச் சட்டைக்காரன்

நெடுங்காலத்திற்கு முன்னால் கடார தேசத்தில் ஓர் அரசன் இருந்தான். அவன் தன் மேலங்கியின் மீது ஏழு தங்க பசுக்களை அணிந்திருந்ததால் ஏழு தங்கப் பசு மன்னன் என்று அழைக்கப்பட்டு வந்தான்.

அவன் பெருஞ் செல்வந்தனாகவும், கடார தேசத்து அரசர்களிலேயே பெருங் கொடை வள்ளலாகவும் விளங்கினான். ஒவ்வொரு நாள்

காலையிலும் அவன் தவறாமல் கோயிலுக்குப் போய் வருவான். கோயிலிருந்து வெளிவரும்போது கோயில் வாசற்படியில் அவனை எதிர்பார்த்துக் காத்திருக்கும் பிச்சைக்காரர் கூட்டத்திற்குத் தாராளமாக அள்ளி அள்ளிக் கொடுப்பான். நாள்தோறும் அவன் இவ்வாறு தாராளமாகத் தருமம் செய்து வந்தபடியால் பிச்சைக்காரர்கள் ஒவ்வொரு நாளும் அவனுடைய கொடையைப் பாராட்டி ஆண்டவனைச் சாட்சிக்கு அழைத்து இவ்வாறு கூறுவார்கள். "ஏழு தங்கப் பசு மன்னரே! இந்த உலகத்திலேயே உம்மைப் போன்றவர் வேறு யாருமில்லை உமக்காக நாங்கள் நீரிலும் குதிப்போம்; நெருப்பிலும் குதிப்போம்!"

ஒவ்வொரு நாள் மாலையிலும் ஏழு தங்கப் பசு மன்னன் தன் நண்பர்களை அழைத்து வந்து விருந்து வைப்பான். நகரில் உள்ள பிரபுக்களும், பெரிய பெரிய வியாபாரிகளும் பணக்காரர் எல்லோரும் அவன் நட்பைப் பெற்றிருந்தனர். அவர்களுக்கு மிகச் சிறந்த சாப்பாடு அளித்து உயர்தரமான பான வகைகளும் குடிக்கக் கொடுத்து கோலாகலமாக விருந்தை நடத்துவான் அரசன். விருந்து முடிந்து வீடு திரும்பும் போது வருகின்ற ஒவ்வொரு விருந்தாளியும் ஒரு சிறந்த வெகுமதிப் பொருளாவது பெறாமல் திரும்புவதில்லை! ஆகவே, அவர்கள் ஒவ்வொருவரும் அவனுடைய தாராள குணத்தைப் பாராட்டி ஆண்டவனைச் சாட்சிக்கு அழைத்து இவ்வாறு கூறுவார்கள்; "ஏழு தங்கப் பசு மன்னரே, இந்த உலகத்திலேயே உம்மைப் போன்றவர் வேறு யாருமில்லை; உமக்காக நாங்கள் நீரிலும் குதிப்போம்; நெருப்பிலும் குதிப்போம்!"

ஒரு நாள் ஓர் இளைஞன் அரண்மனைக்கு வந்து அரசரைக் கண்டு பேச அனுமதி கேட்டான். அவன் ஏழு தங்கப் பசு மன்னனின் முன் வந்தபோது, "அரசே! நான் தங்களுடைய தாராள குணத்தைப் பற்றிக் கேள்விப்பட்டுத் தங்களிடம் ஓர் உதவி கேட்பதற்காக வந்திருக்கிறேன். இந்த நகரத்திலேயே

என்னைப் போல் துர்ப்பாக்கியசாலி வேறு யாரும் இருக்க மாட்டார்கள் என்பது நிச்சயம். எனக்கு ஏழு வயதாகும்போது என் தாய் தந்தையர் இருவரும் இறந்து போய்விட்டார்கள். அன்று முதல் இன்றுவரை நான் என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கடுமையாகப் பாடுபட்டு உழைத்து வருகிறேன். கடந்த சில ஆண்டுகளாக நான் ஓர் இளம் பெண்ணை நேசித்தேன். அவள் எவ்வளவு அன்பும் பண்பும் உள்ளவளோ அவ்வளவு அழகும் கவர்ச்சியும் உள்ளவள். இன்னும் சில நாட்களில் எங்களுக்கிடையே திருமணம் நடக்க ஏற்பாடாகி இருந்தது. ஆனால், இன்று காலை அவள், இறந்து போய்விட்டாள். இனிமேல் என் வாழ்வில் நான் இன்பத்தையே காணமுடியாது என்று எண்ணுகிறேன். நான் பாலி மொழி படிக்கத் தெரிந்தவனாக இருந்தாலும் வேத சாஸ்திரங்களைப் படித்துச் சாதுவாக மாறிவிடலாம். ஆனால் எனக்குப் பாலி மொழி தெரியாது. ஏழு தங்கப் பசு மன்னரே, என்மீது இரக்கம் காட்டுங்கள். என் காதலியின் ஈமக் கிரியைகளைச் செய்ய எனக்குப் பதினைந்து பொன் மட்டும் கொடுத்து உதவி செய்யுங்கள்!" என்றான்.

"நண்பனே, உன் நிலையைக் கண்டு நான் மிகவும் வருந்துகிறேன். பதினைந்து பொன் மட்டுமல்ல, உனக்கு நூறு பொன் கொடுக்கச் செய்கிறேன். மேலும் உனக்குத் துன்பங்கள் அணுகாதிருக்குமாக!" என்று கூறினான் ஏழு தங்கப் பசு மன்னன்.

நூறு பொன்னையும் வாங்கிக் கொண்டு மன்னனுக்கு நன்றி கூறி வாழ்த்தி வணங்கிவிட்டுச் சென்றான் இளைஞன். ஆனால், மூன்று நாட்களுக்குப் பிறகு அவன் திரும்பவும் வந்து சேர்ந்தான். அவன் தன் துன்பத்திற்கு அறிகுறியாகக் கறுப்பு சட்டை அணிந்திருந்தான். "ஏழு தங்கப் பசு மன்னரே! நீங்கள் எனக்கு கருணை காட்டினீர்கள். எனக்குப் பிழைப்பதற்கு வேறு வழி புலப்படவில்லை. ஆகவே

அன்பும் கருணையும் கொண்ட தாங்கள் என்னைத் தங்கள் அரண்மனையில் ஏதாவது ஒரு வேலையில் சேர்த்துக் கொண்டு ஆதரிக்க வேண்டுகிறேன். நான் உங்களுக்கு உண்மையாக உழைப்பேன். என் உழைப்புக்காக நீங்கள் சம்பளம் எதுவும் தரவேண்டியதில்லை" என்று இளைஞன் கேட்டான்.

"நான் எப்போதும் சம்பளமில்லாமல் யாரிடமும் வேலை வாங்குவது கிடையாது. ஆனால், அப்படியிருக்க வேண்டும் என்று நீ விரும்புகிறபடியால் அப்படியே இருக்கட்டும்!" என்றான் அரசன்.

இம்மாதிரியாக அந்த இளைஞன் ஏழு தங்கப் பசு மன்னனின் அரண்மனையில் வேலைக்குச் சேர்ந்து கொண்டான். அவன் அரச பக்தியோடும் உண்மையாகவும் சிறப்பாகவும் தன் வேலைகளைச் செய்து வந்தபடியால், எல்லா வேலைக்காரர்களுக்கும் மேலாளாக அவனை உயர்த்தினான் அரசன். ஆனால், அந்த இளைஞன் எப்போதும் இறந்து போன தன் காதலியை நினைத்து வருந்திக் கொண்டிருந்தபடியால், அதற்கு அடையாளமாகக் கறுப்புச் சட்டையையே அணிந்து கொண்டிருந்தான். அதனால் அவனை எல்லோரும் கறுப்புச் சட்டைக்காரன் என்றே அழைத்து வந்தார்கள்.

ஒருநாள் அவன் ஏழு தங்கப் பசு மன்னனிடம் வந்து பேசிக் கொண்டிருந்தான். "மன்னர் பெருமானே! நீங்கள் விருந்துக்காகவும் தருமத்திற்காகவும் அளவில்லாமல் செலவழிக்கிறீர்கள். இந்த நிலையிலேயே போய்க் கொண்டிருந்தால், ஓர் ஆண்டுக் காலத்திற்குள் உங்கள் நிதிக் கிடங்கில் இருக்கும் பொன்னும் வெள்ளியும் தீர்ந்து போய் விடும். நீங்களும் ஏழையாகி விடுவீர்கள்!" என்றான்.

"அதனால் என்ன வந்துவிட்டது? எனக்கு மனைவியுமில்லை. பிள்ளைகளுமில்லை. நான் ஏழையாகும் வரை என் பணத்தைச் செலவழித்துக் கொண்டிருப்பேன். என் பணம் எல்லாம் தீர்ந்து

போய் விட்டாலும் நான் மறுபடியும் பணக்காரனாகி விடுவேன். ஏனென்றால் எனக்கு நிறைய நண்பர்கள் இருக்கிறார்கள். அவர்கள் நான் துன்பப்படுவதை ஆற்றமாட்டார்கள். எனக்காக நீரிலும் நெருப்பிலும் குதிக்கவும் தயாராக இருப்பதாக அவர்கள் அடிக்கடி என்னிடம் கூறியிருக்கிறார்கள்" என்று பதிலளித்தான் அரசன்.

"நீங்கள் அதை நம்பிக் கொண்டிருக்க முடியாது" என்றான் கறுப்புச் சட்டைக்காரன்.

அன்று மாலை விருந்து நடக்கும்போது, அரசன் விருந்தாளிகளை நோக்கி, "நண்பர்களே, எனக்காக நீரிலும் நெருப்பிலும் குதிப்பதாக நீங்கள் அடிக்கடி கூறி வந்திருக்கிறீர்கள். ஆனால் நான் அதை நம்பிக் கொண்டிருக்க முடியாது என்று கறுப்புச் சட்டைக்காரன் கூறுகிறான். அவனுக்கு நீங்கள் என்ன பதில் சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டான்.

உடனே அங்கு கூடியிருந்த ஒவ்வொருவரும் "கறுப்புச் சட்டைக்காரன் அயோக்கியன்!" என்று கூறிக் கூச்சலிட்டார்கள். "அரசே! அவன் உங்களிடமிருந்து கொள்ளையடித்துவிட்டு உங்களையே ஏமாற்றுகிறான். அவனை நம்பாதீர்கள்!" என்று அவர்கள் எல்லோரும் கூறினார்கள்.

உடனே ஏழு தங்கப் பசு மன்னன் கறுப்புச் சட்டைக்காரனை அழைத்து வரச் செய்தான்.

"நீ என்னிடமே கொள்ளையடிக்கும் திருடன் என்று என் நண்பர்கள் சொல்கிறார்கள். அவர்கள் சொல்லுவது உண்மைதானே?" என்று கேட்டான்.

அதை அந்த கறுப்புச் சட்டைக்காரன் சிறிதுகூட மறுக்கவில்லை. "உண்மைதான் அரசே! நான் உங்களிடம் திருடியது உண்மைதான்!" என்று ஒப்புக் கொண்டான்.

இதைக் கேட்டதும் ஏழு தங்கப் பசு மன்னனுக்குக் கோபம் பொங்கியெழுந்தது. திரும்பத் தன் கண்ணில் விழிக்கக் கூடாது என்று சொல்லி அந்தக் கறுப்புச் சட்டைக்காரனை விரட்டிவிட்டான். உண்மையிலேயே அந்தக் கொள்ளைக்காரன் ஒரு கோட்டை வாங்கக் கூடிய அளவு பணத்தைக் கொள்ளையடித்திருந்தான். அவன் அரண்மனையை விட்டு வெளியேறி வெகு தூரத்தில் உள்ள ஐராவதி நதிக்கரைக்கு வந்தான். அங்கேயிருந்த ஒரு பெரிய கோட்டையையும் அதைச் சேர்ந்த நிலங்களையும் விலைக்கு வாங்கினான். தான் எதிர்பார்க்கிற காரியம் நடக்கும் வரையிலும் அவன் அங்கேயே இருந்து வந்தான்.

ஓராண்டு காலத்திற்குப் பிறகு ஏழு தங்கப் பசு மன்னனுடைய நிதிக் கிடங்கில் இருந்த பொன்னும் வெள்ளியும் முழுக்கத் தீர்ந்து போய்விட்டதைக் கண்டான். அன்று அவன் கடைசித் தடவையாகத் தன் பணக்கார நண்பர்களுக்கு விருந்து வைத்தான். விருந்து முடிந்தவுடனே, "நண்பர்களே! என் நிதிக் கிடங்கு காலியாகி விட்டது. பொன்னும் வெள்ளியும் எல்லாம் தீர்ந்து போய்விட்டன. உங்களுக்குக் கொடுக்க என்னிடம் எதுவும் இல்லை. எனக்காக நீரிலும் நெருப்பிலும் குதிக்கத் தயாராக இருப்பதாக எத்தனையோ முறை நீங்கள் கூறினீர்கள். இப்போது நான் சீர்குலைந்து விட்டேன். எனக்கு உதவி செய்யுங்கள்" என்று கேட்டான் அரசன்.

ஆனால், விருந்தாளிகள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். அவர்கள் முகங்கள் இருண்டன. அவர்கள் கோபத்தோடு "ஏழு தங்கப் பசு மன்னரே! பிச்சை போட்டுப் போட்டு உங்கள் செல்வத்தை வீணாக்கி விட்டீர்கள். அதற்கு நாங்கள் என்ன செய்வோம்? நீங்கள் எங்களிடம் உதவி கேட்டுப் பயனில்லை. ஏழைப் பிச்சைக்காரர்களிடமே போய் உதவி கேளுங்கள்!" என்று சொன்னார்கள்.

தான் கேட்பது, தன் காதில் விழுவது உண்மைதானா என்று அரசனால் நம்ப முடியவில்லை.

ஆனால், அவர்கள் தான் இருப்பதையே காணாதவர்கள் போலத் தன் பக்கம் முதுகைத் திருப்பிக் கொண்டு தங்களுக்குள்ளே பேசிக் கொண்டிருந்ததைக் கவனித்த போது, தான் கேட்பது பொய்யல்ல என்று நன்றாகத் தெரிந்து கொண்டான்.

அவன் அங்கிருந்து எழுந்து ஏழைகளும் பிச்சைக்காரர்களும் இருக்குமிடத்திற்கு வந்தான். அவர்கள் அவனிடம் பிச்சை கேட்டார்கள். "நண்பர்களே! நான் உங்களுக்கு ஒன்றும் கொடுக்க முடியாத நிலையில் இருக்கிறேன். ஏனென்றால் என் பொன்னும் வெள்ளியும் எல்லாம் தீர்ந்து போய்விட்டன. உங்களுக்குக் கொடுக்க என்னிடம் எதுவும் இல்லை. எனக்காக நீரிலும் நெருப்பிலும் குதிக்கத் தயாராக இருப்பதாக நீங்கள் எத்தனையோ முறை கூறியிருக்கிறீர்கள். அதனால் நான் எதிர்காலத்தைக் குறித்து அஞ்சாமல் வாழ்ந்து வந்தேன். "நண்பர்களே! நீங்கள் ஏழைகள் தான், இருந்தாலும் உங்களிடம் இருப்பதில் ஒரு சிறு பங்கு எனக்குக் கொடுத்து உதவினால் போதும்"

உடனே பிச்சைக்காரர்கள் எல்லோரும் அவனுக்கு எதிராகக் கூச்சல் போட்டார்கள். "பணக்காரர்களோடு விருந்து சாப்பிட்டுக் குடித்துக் கும்மாளமிட்டதால் தான் உங்கள் பணமெல்லாம் கரைந்து போய்விட்டது. நாங்கள் இல்லாதவர்கள் ஏன் உங்களுக்குப் பங்கு தரவேண்டும்? வேண்டுமானால் எங்களைப் போல் தெருத் தெருவாய் பிச்சையெடுத்து உம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும்!" என்று எல்லாப் பிச்சைக்காரர்களும் கூறினார்கள்.

தான் கேட்டது, தன் காதில் விழுந்தது உண்மைதானா என்று ஏழு தங்கப்பசு மன்னனால் சிறிதும் நம்பமுடியவில்லை. ஆனால் அந்தப் பிச்சைக்காரர்களுக்குள் நடந்த பேச்சுக்களையும் தான் அவர்களுக்குப் பிச்சை போடாததால் அவர்கள் தன்னைப் பழிப்பதையும் வெறுத்துப் பேசுவதையும்

பார்த்த பிறகு தான் கேட்டது பொய்யல்ல என்று நன்றாகப் புரிந்து கொண்டான்.

விருந்தாளிகளின் கடுகடுப்புக்கும் பிச்சைக் காரர்களின் பழித் தூற்றலுக்கும் இடையே மனமிடிந்து துயரத்தோடு மன்னன் தன் அரண்மனை முற்றத்தில் நின்று கொண்டிருந்தான். அப்போது, வேகமாக வரும் குதிரையின் குளம்படிச் சத்தமும், வேட்டை நாய்கள் குரைக்கும் ஓசையும் வீதிப் புறத்திலே கேட்டது. மறு வினாடி பழைய கறுப்புச் சட்டைக்காரன் அரண்மனை முற்றத்திற்கு வந்து சேர்ந்தான். அவன் ஏறி வந்த குதிரையைத் தொடர்ந்து வேட்டை நாய்க் கூட்டமொன்று உள்ளே நுழைந்தது. அந்த கறுப்புச் சட்டைக்காரன், கையில் குறுந்தடியொன்று வைத்திருந்தான்.

"விரட்டுங்கள்! விரட்டுங்கள்!" என்று அவன் ஏவி விட்ட மாத்திரத்தில் அங்கு நின்று கொண்டிருந்த பிச்சைக்காரர்களின் கூட்டத்திலும், விருந்தாளி களிடையிலும் வேட்டை நாய்கள் புகுந்து கடித்தும் உறுமியும் நகத்தால் பிறாண்டியும், அவர்களை ஓட ஓட விரட்டியடித்தன. முற்றத்திலிருந்த கூட்டம் முழுவதும் கலைந்த பிறகு அவன் குதிரையை விட்டு இறங்கி அரசனருகில் வந்தான். "ஏழு தங்கப் பசு மன்னவரே!" நன்றி கெட்ட அவர்களை நான் விரட்டி விட்டேன்!" என்று சொன்னான்.

ஆனால் ஏழு தங்கப் பசு மன்னன், கறுப்புச் சட்டைக்காரனைக் கோபத்தோடு நோக்கினான். "என்னிடம் கொள்ளையடித்தவனிடமிருந்து நான் எவ்விதமான உதவியும் எதிர் பார்க்கவில்லை" என்று கூறினான்.

"அரசே! நான் உங்களிடமிருந்து திருடியது உண்மைதான். ஆனால் எதற்காகத் திருடினேன்? நீங்கள் சீர்குலைகின்ற நேரத்தில் பயன்பட வேண்டும் என்பதற்காகவேதான்! ஐராவதி ஆற்றங்கரையில் இருக்கும் அழகான அரண்மனை தங்களை

எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருக்கிறது. அது தங்கள் அரண்மனை!'' என்றான் கறுப்புச் சட்டைக்காரன்.

ஆகவே, ஏழு தங்கப் பசு மன்னன் ஆரவாரம் நிறைந்த பட்டணத்து அரண்மனையை விட்டு, அமைதி நிலவிய ஐராவதி ஆற்றங்கரையில் இருந்த அந்த அழகிய அரண்மனையில் போய் வாழ்ந்து வந்தான். முன்னைப் போலவே கறுப்புச் சட்டைக்காரன் அவனுக்குச் சம்பளமில்லாமல் வேலை பார்த்து வந்தான். அவ்வாறு எவ்விதமான மாறுபாடுமின்றி ஏழு ஆண்டுகள் அமைதியாகக் கழிந்தன.

ஏழாவது ஆண்டின் கடைசி நாளன்று ஏழு தங்கப் பசு மன்னன் கறுப்புச் சட்டைக்காரனைத் தன்னருகில் அழைத்தான். "என் வாழ்நாளிலேயே ராஜ விசுவாசமுள்ளவன் ஒரே ஒருவனைத்தான் கண்டிருக்கிறேன். அது நீதான்! நான் உனக்கு ஒரு பெரிய இரகசியத்தைக் கூறப் போகிறேன். அது என் காலத்திற்குப் பிறகு உனக்குப் பலனளிக்கும். ஏழு ஆண்டுகளுக்கு முன்னால், என் நண்பர்களென்று கருதிய நயவஞ்சகர்களுக்கு விருந்தளித்ததாலும் நன்றி கெட்ட பிச்சைக்காரர்களுக்குத் தருமம் செய்ததாலும் என் நிதிக்கிடங்கு காலியாகிப் பொன்னும் வெள்ளியும் எல்லாம் தீர்ந்து விட்டன அல்லவா? அப்போது நான் நினைத்திருந்தால், அந்த நிதிப் பெட்டகம் முழுவதையும் திரும்பவும் நிறைய வைத்திருப்பேன். ஆனால் நான் அப்போது இதைச் செய்யவில்லை. அப்படிச் செய்யாததினால் த்தான், உன்னைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் எவ்வளவு நன்றி விசுவாசமற்றவர்கள் என்பதை அறிந்து கொள்ள முடிந்தது. ஆனால், இப்போது எனக்கு முதுமை ஏறிக் கொண்டிருக்கிறது. இன்னும் ஒரு வருடத்திற்குள் நான் இறந்து விடுவேன் என்று தோன்றுகிறது. ஆகையால் என் ஒரே நண்பனான உன்னையே என் சொத்துக்களுக்கு வாரிசாக்கி விட்டுப் போக எண்ணுகிறேன். ஆகவே எங்கள் குடும்பத்தின் அழியாச் செல்வமாகிய இந்த

தங்கப் பசுக்களின் இரகசியத்தை நான் உனக்குத் தெரிவித்து விடுகிறேன். முதலில் ஒரு கோடாரியை எடுத்துக் கொண்டு, இரண்டு குதிரைகளுக்குச் சேணம் பூட்டிக் கொண்டு வா. நாம் இருவரும் புறப்படலாம்” என்றான் அரசன்.

அதன்படியே, கறுப்புச் சட்டைக்காரன், சேணம் பூட்டிய இரு குதிரைகளைக் கொண்டு வந்தான். கையில் ஒரு கோடாரியும் எடுத்து வந்தான். இருவரும் குதிரை மீது ஏறி வெகு தூரத்தில் இருந்த ஒரு நாணற் காட்டுக்கு வந்தார்கள்.

“கோடாரியை எடுத்துக் கொள். மிக உயர்ந்த நாணலை வெட்டு. ஆனால் நீ வெட்ட முயலும் போது அந்த நாணல் தன்னை காத்துக் கொள்வதற்காக மூன்று முறை உருமாறும். ஆனால் அதற்காகப் பயப்படாமலும் கவலைப்படாமலும் நீ வெட்ட வேண்டும். மூன்று முறையில் நீ அந்த நாணல் மரத்தை இரண்டாக வெட்டத் தவறினால் நீ உடனே இறந்து போய் விடுவாய். ஆகவே, சிறிதும் அஞ்சாமல் உன் பலங்கொண்டமட்டும் அதை வெட்டித் துண்டாக்க வேண்டும்.” என்று கறுப்புச் சட்டைக்காரனிடம் ஏழு தங்கப் பசு மன்னன் கூறினான்.

கறுப்புச் சட்டைக்காரன் கோடாரியைக் கையில் எடுத்துக் கொண்டான். மிக உயரமாக நீண்டு வளர்ந்திருந்த நாணல் மரத்தின் அருகில் சென்றான். அதை ஒரு கையால் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு வெட்டுவதற்காகக் கோடாரியை ஓங்கினான். உடனே அந்த நாணல் ஏழுதலை நாகப்பாம்பாக மாறி சீறியது. ஆனால் எவ்வளவு பயங்கரமாயிருந்த போதிலும் கறுப்புச் சட்டைக்காரன் தைரியத்தைக் கைவிடாமல் ஓங்கி ஒரு வெட்டு வெட்டினான். இரண்டாவது முறையாக அவன் கோடாரியை ஓங்கிய போது அந்த நாணல் மரம் அப்போதுதான் பிறந்த ஒரு பச்சைக் குழந்தையின் உருவத்தை வந்தடைந்தது. ஒரு வினாடி நேரம்தான் தயங்கினான் கறுப்புச் சட்டைக்காரன். பிறகு மனத்தைத் தளரவிடாமல் கட்டுப்படுத்திக்

கொண்டு முன்னிலும் பலமாக ஒரு வெட்டு வெட்டினான். மூன்றாவது முறையாக அவன் கோடாரியை ஓங்கியபோது, நாணல் மரம் இறந்து போன அவன் காதலியாக உருவெடுத்தது. காதலியின் உடலை கண்டவுடன், இவன் கைகள் நடுங்கின. கோடாரி நழுவிக் கீழே விழுந்து விடும் போலிருந்தது. ஆனால் அதற்குள் ஏழு தங்கப் பசு மன்னனின் எச்சரிக்கை ஞாபகத்துக்கு வந்து விட்டபடியால் அவன் இருந்த தைரியத்தையெல்லாம் ஒன்று சேர்த்து மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு பலமாக ஒரு வெட்டு வெட்டினான்.

அந்த உயரமான நாணல் மரத்தின் வெட்டுப்பட்ட பகுதியைக் கையில் எடுத்துக் கொண்டு அவன் அரசனிடம் திரும்பி வந்தான்.

“உன் வேலையை நல்ல முறையில் செய்து விட்டாய். இப்போது, ஒரு புல்லாங்குழல் செய்ய வேண்டிய அளவுக்கு இந்த நாணலை வெட்டு” என்றான் ஏழு தங்கப் பசு மன்னன். அவ்வாறே செய்தபின் அவர்கள் அரண்மனை திரும்பினார்கள்.



அடுத்த ஐந்து மாதங்களும், அரண்மனை வேலைக்காரர்கள் எல்லோரும் தூங்கிய பிறகு இரவு தோறும் அந்தப் புல்லாங்குழலில் ஒரு வகையான இராகத்தைப் பாடுவதற்கு கறுப்புச் சட்டைக் காரனைப் பழக்கினான் ஏழு தங்கப் பசு

மன்னன். வைகாசி மாதம் பௌர்ணமியன்று மாலையில் அவன் கறுப்புச் சட்டைக்காரனை நோக்கி "இன்று நள்ளிரவில், இரண்டு பெரிய அண்டாக்களும், ஆறு தோல் பைகளும் புல்லாங்குழலும் எடுத்துக் கொண்டு, ஆற்றங்கரைச் சமவெளிக்கு நீ என்னோடு வரவேண்டும்" என்றான்.

அதன்படியே, அன்று நள்ளிரவு நேரத்தில் கையில் புல்லாங்குழலும், அண்டாக்களுடனும், பைகளுடனும் ஐராவதியாற்றின் கரையிலிருந்து சமவெளிப் பிரதேசத்திற்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். "இப்போது நான் சொல்லிக் கொடுத்த அந்த இராகத்தை புல்லாங் குழலில் வாசி" என்று கட்டளையிட்டான் அரசன்.

கறுப்புச் சட்டைக்காரன், அரசனின் கட்டளைப் படியே குழலை ஊதினான். உடனே அவர்களுக்கு எதிரில் இருந்த தரை இரண்டாகப் பிளந்தது. பூமியின் அடியிலிருந்து ஏழு உயிருள்ள தங்கப் பசுக்கள் வெளியில் வந்தன. அவை, அரசன் முன் தலை வணங்கி நின்றன. "இந்தப் பசுக்களின் அருகில் அண்டாக்களைக் கொண்டு வந்து வைத்துப் பால் கற" என்று கறுப்புச் சட்டைக் காரனுக்கு அரசன் உத்தரவிட்டான். அதன்படி கறுப்புச் சட்டைக்காரன் இரண்டு அண்டாக்களும் நிறையும்வரை பசுக்களின் மடியிலிருந்து பால் கறந்தான். அந்தப் பால் முழுவதும் தங்க நாணயங்களாய் மாறின. "இந்தத் தங்க நாணயங்களைப் பைகளிலே போட்டுக் கட்டு" என்றான் அரசன். அவ்வாறு கட்டி முடித்ததும், ஆற்றில் ஒரு குறிப்பிட்ட இடத்தைக் காட்டி அந்த இடத்தில் பைகளை ஆற்றுக்குள் போடும்படி சொன்னான் அரசன். கடைசிப் பையையும் ஆற்றுக்குள் போடப்பட்டவுடன் பொழுது விடிந்து விட்டது. அந்த ஏழு தங்கப்பசுக்களும் பூமியின் அடிவாரத்திற்குப் போய் மறைந்து விட்டன. பூமியும் மறுபடி மூடிக் கொண்டது.

ஒரு மாதத்திற்குப் பிறகு, முன் சொன்னபடியே ஏழு தங்கப்பசு மன்னன் இறந்து போனான். அவன் தகுதிக்குத் தகுந்தபடி மிகவும் சிறப்பான முறையில் ஈமச் சடங்குகளைச் செய்து முடித்தான் கறுப்புச் சட்டைக்காரன். பிறகு அவன் பட்டணத்து அரண்மனைக்குப் போனான். "ஏழு தங்கப் பசு மன்னர் இறந்து விட்டார். அவர் இறக்கும்போதும் பணக்காரராகவே இறந்தார்!" என்ற விஷயத்தை வீதிதோறும் தமுக்குப் போடச் செய்தான்.

உடனே, பிரபுக்களும், வியாபாரிகளும், பணக்காரர்களும், கோட்டை வாசலிலே வந்து கூடினார்கள். "என்ன துன்பமான செய்தி! ஏழு தங்கப் பசு மன்னரைப் போல் இந்த உலகத்தில் யாரும் இருந்ததில்லை. அவருக்காக நாங்கள் நீரிலும் குதிப்போம், நெருப்பிலும் குதிப்போம்! நிச்சயம் அவர் தம் செல்வத்தை அள்ளி வழங்கச் சொல்லி சாசனம் செய்து வைத்திருப்பார்!" என்று எல்லோரும் சொன்னார்கள்.

அப்போது அரண்மனைக் கதவு திறந்தது. கறுப்புச் சட்டைக்காரன் கையில் குறுந்தடியுடன் குதிரையேறி வந்தான். அவன் பின்னாலேயே வேட்டை நாய்கள் குரைத்துக் கொண்டு வந்தன. "விரட்டுங்கள்! விரட்டுங்கள்!" என்று அவன் வேட்டை நாய்களுக்கு கட்டளையிட்டான். பிரபுக்களையும், வியாபாரிகளையும், பிச்சைக்காரர்களையும் வேட்டை நாய்கள் கடித்தும் உறுமியும் ஓட ஓட விரட்டின. அரண்மனை முற்றத்தில் ஒருவர் கூடப் பாக்கியில்லாமல் ஓடும் வரையிலே கையில் குறுந்தடியுடன் நின்றான் கறுப்புச் சட்டைக்காரன். எல்லோரும் ஓடிப் போன பிறகு, "ஏழு தங்கப்பசு மன்னரின் நீதி இப்படியே இருக்கட்டும்!" என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான்.

பிறகு கறுப்புச் சட்டைக்காரன் அரசனுடைய ஈமக்கிரியை நடந்த ஆற்றங்கரை அரண்மனைக்குத் திரும்பி வந்தான். அங்கேயிருந்து பாலி மொழி

படித்துத் தெரிந்தவுடன், அவன் பகவானை நோக்கிப் பிரார்த்தனை செய்தான். அப்படியே ஒரு புத்த சாமியாராக மாறி விட்டான். கறுப்புச் சட்டையை கழற்றிவிட்டுக் காவியுடையணிந்து கொண்டான். ஐராவதியாற்றின் அடியில் கிடந்த தங்க நாணயங்களை எடுத்து ஒரு புத்த மடம் கட்டினான். அந்த மடத்தில் இருந்து கொண்டு இரவும் பகலும் ஏழு தங்கப் பசு மன்னனின் ஆத்மா சாந்தியடைய இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தான்!

---

## கதை : நான்கு

---

# அசட்டு அரக்கன்

ஆனைமலை அடிவாரத்தில் தோட்டக்காரன் சமயோசிதம் தன் மனைவியுடனும் ஏழு மக்களுடனும் வாழ்ந்து வந்தான். ஏழு மக்களில் மூன்று ஆண் பிள்ளைகள், நான்கு பெண்கள்.

நாள் முழுவதும் தோட்டக்காரன் சமயோசிதம், செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதும், பாத்தி வெட்டுவதும், கன்று நடுவதும், விதை விதைப்பதுமாகப் பாடுபட்டு உழைத்து வந்தான். அவன் மனைவி ஆவுடையாளும் காய்கறிகள் விற்று வந்து அதனால் கிடைக்கும் சிறு ஊதியத்தைக் கொண்டு சமையல் செய்து சாப்பாடு போடுவதும், துணிமணிகள் வாங்கித் தைப்பதும், தன் ஏழு குழந்தைகளையும் வளர்ப்பதுமாக நாள் முழுவதும் உழைத்துக் கொண்டு வந்தாள்.

அந்தத் தோட்டத்தையும், வீட்டில் இருந்த ஓட்டை உடைசலான பழைய சாமான்கள் சிலவற்றையும் தவிர சமயோசிதத்திடம் சில கோழிகளும் ஒரு பசு மாடும்

தான் இருந்தன. கோழிகள் இடும் முட்டைகளையும், பசு கறக்கும் பாலையும், அவன் மனைவி ஊருக்குள் கொண்டு போய் விற்று விட்டு வருவாள். இந்தப் பணமெல்லாம் சேர்ந்து அவர்கள் அன்றாடம் கஞ்சி காய்ச்சிக் குடிப்பதற்கே போதுவதில்லை. ஆகவே அவர்கள், மறுநாள் சாப்பாட்டைப் பற்றி நினைக்கக் கூட மாட்டாத நிலையில் இருந்தார்கள்.

மலையுச்சியில் இருந்த கோட்டையில் பெருந்தலைப் பிரசண்டன் என்ற அரக்கன் தன் மனைவியான பெருவாய் பேச்சியுடனும் ஒரு வேலைக்காரனுடனும் வசித்து வந்தான். அந்த மலையும், மலையைச் சுற்றி இருந்த இடங்களும் தனக்குத்தான் சொந்தமானது என்று அந்த அரக்கன் நினைத்துக் கொண்டான். ஆகவே, தோட்டக்காரன் சமயோசிதத்தின் நிலமும் தன்னுடையதென்றே கூறி அதற்கு வாடகையாகப் பணமும் காய்கறிகளும் பெற்று வந்தான். ஆண்டுக்கொரு முறை அவன் வாடகைப் பணம் வாங்க மலையை விட்டுக் கீழே இறங்கி வருவான். அவன் மிகப் பெரியவனாகவும், வலிமை வாய்ந்தவனாகவும், பொல்லாதவனாகவும் இருந்த படியால், அவன் கேட்பதைக் கொடுப்பதைத் தவிர தோட்டக்காரனுக்கு வேறு வழி தெரியவில்லை. தன்னுடைய வரும்படி தனக்கும் தன் மனைவிக்கும் தன் ஏழு குழந்தைகளுக்கும் போதுமானதாக இல்லாவிட்டாலும் கூட எப்படியோ ஆண்டுதோறும் கஷ்டப்பட்டுச் சேர்த்து வைத்து அந்த அரக்கனுக்கு வாடகை கட்டி வந்தான் சமயோசிதம்.

ஆனால், ஒரு வருடம் மழை பொய்த்து விட்டது. கிணறு குளம் எல்லாம் தண்ணீர் வற்றித் தூர்ந்து போய்விட்டன. தோட்டத்திற்குத் தூரத்தில் இருந்த ஆற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து ஊற்ற வேண்டியிருந்தது. எவ்வளவு கஷ்டப்பட்டு சமயோசிதம் தண்ணீர் தூக்கி வந்த போதிலும் முன்னைப் போல காய்கறிகள் அதிகம் காய்க்கவில்லை. ஏதோ கிடைத்ததைக் கொண்டு அவர்கள் அரைவயிறும் குறை

வயிறுமாகக் கஞ்சி காய்ச்சி சாப்பிட்டு வந்தார்கள். வயிற்றுக்கே உணவு போதாதபோது அவர்கள் வாடகை எப்படிக் கொடுக்க முடியும்? ஆகவே அவர்கள் அந்த ஆண்டு முடிவில் அரக்கனுடைய வருகையை அச்சத்தோடும், பீதியோடும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.



வழக்கமாக அரக்கன் பெருந்தலைப் பிரசண்டன் வாடகை வசூல் பண்ண வருகின்ற மாதம் நெருங்கிய உடன், அவன் வருவதை முன்கூட்டியே அறிவிக்கும்படி தன் ஏழு குழந்தைகளையும் ஒரு நாளைக்கொருவர் வீதம் மலைப் பாதைப் பக்கம் காவல் வைத்திருந்தான் சமயோசிதம். ஒரு நாள் மாலை சமயோசிதமும் அவன் மனைவி மக்களும் அப்போதுதான் காய்ச்சி வைத்திருந்த கஞ்சியைக் குடித்து முடிந்திருந்தார்கள். அன்று காவல்

பார்த்துக் கொண்டிருந்த அவனுடைய இரண்டாவது மகன் அப்போது திடீரென்று கூச்சலிட்டுக் கொண்டு ஓடி வந்தான். "அப்பா, அப்பா! அரக்கன் மலையில் இருந்து இறங்கி வருகிறான்! கையில் தண்டாயுதத்தோடு அவன் வந்து கொண்டிருக்கிறான்!" என்று கூவிக் கொண்டே ஓடி வந்தான்.

"சீக்கிரம்! சீக்கிரம்! சிறிதும் தாமதிக்காமல் எல்லோரும் புறப்படுங்கள்!" என்று சொல்லி சமயோசிதம் தன் மனைவியையும் பிள்ளைகளையும் வீட்டுக்குப் பின்னால் இருந்த வைக்கோல் போருக்கு அழைத்துச் சென்றான். வைக்கோல் போரின் அடியில் எல்லோரையும் ஒளிந்து கொள்ளச் சொன்னான். அவர்கள் எல்லோரும் சரியாக நுழைந்து விட்டார்களா என்று எண்ணிக் கொண்டான். ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு ஆனவுடன் சமயோசிதமும் ஒன்பதாவதாக நுழைந்து கொண்டு வெளியில் மேலும் கொஞ்சம் வைக்கோலை இழுத்து விட்டு வழி தெரியாமல் மறைத்து விட்டான். அங்கே அவர்கள் பயந்து நடுநடுங்கிக் கொண்டு அரக்கன் வந்து போவதற்காகக் காத்திருந்தார்கள்.

மலையிலிருந்து அரக்கன் பிரசண்டன் இறங்கி வந்தான். தோட்டக்காரன் வீட்டைத் தட்டிப் பார்த்தான். பதிலில்லை. தன் கையிலிருந்த தண்டாயுதத்தால் கதவை இடித்தான். பலனில்லை. வீட்டு ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான். யாரும் காணப்படவில்லை. அதன் பிறகு தான் வீடு வெளியில் பூட்டியிருப்பதைக் கவனித்தான். அரக்கனுக்கு ஒரே கோபமாக வந்தது. "நாளை வந்து பார்த்துக் கொள்கிறேன்" என்று கத்தி விட்டுத் திரும்பினான்.

திரும்பிப் போகும்போது, தோட்டக்காரனுடைய பிள்ளை குட்டிகள் யாராவது தட்டுப்படுகிறார்களா என்று அரக்கன் சுற்றுமுற்றும் நோக்கினான். மாட்டுக் கொட்டகையில் கட்டிக் கிடந்த பசு மாட்டைத் தவிர வேறு ஓர் உயிர்ப் பிராணியைக் கூட அவன் காண

முடியவில்லை. தனக்கு வந்த கோபத்தில் அவன் தன் தண்டாயுதத்தால் ஓங்கி அந்தப் பசு மாட்டின் மண்டையிலே ஓர் அடி அடித்தான். அந்த ஒரே அடியில் பசு மாடு செத்துக் கீழே விழுந்து விட்டது. பிறகு அவன் தன் கோட்டைக்குத் திரும்பிச் சென்றான்.

அவன் போய்விட்டான், இனித் தைரியமாக வெளி வரலாம் என்று தோன்றியதும், தோட்டக்காரன் சமயோசிதமும், குடும்பத்தினரும், வைக்கோல் போரின் அடியிலிருந்து வெளிப்பட்டார்கள். இருமிக் கொண்டும், தும்மிக் கொண்டும், அரிக்கும் உடலைச் சொரிந்து கொண்டும், தூசியைத் தட்டிக் கொண்டும் அவர்கள் வெளியில் வந்தபோது அதுவரை அமைதியாக இருந்த அந்தத் தோட்டம் திடீரென்று உயிர் பெற்று' விட்டது போல் இருந்தது.

முதலில் அவர்கள் தாங்கள் கெட்டிக்காரத்தனமாக நடந்து கொண்டு விட்டதாக எண்ணி மகிழ்ச்சி யடைந்தார்கள். ஆனால், பசுமாடு செத்துக் கிடந்ததைப் பார்த்த பிறகு அவர்கள் மகிழ்ச்சியெல்லாம் துயரமாக மாறிவிட்டது. அந்தப் பசுமாடு அவர்களைப் பலவகையிலும் காப்பாற்றி வந்த தெய்வமாக விளங்கியது. அது செத்துப் போனதை எண்ணித் தோட்டக்காரன் மனைவி ஆவுடையாள் விம்மி விம்மி அழுதாள்.

“கொட்டிப் போன பாலுக்காக கட்டி அழுது கொண்டிருந்தால் என்ன பயனுண்டு? அழுவதை நிறுத்தி விட்டு ஆக வேண்டிய காரியத்தைப் பார்க்கலாம் வா! நான் அந்த மாட்டின் தோலை உரித்தெடுக்கிறேன். அதைச் சந்தையில் கொண்டு போய் விற்றால் ஒன்று அல்லது இரண்டு ரூபாய் கிடைக்கும். அதன் சதையை நீ கறியாகச் சமைத்து வை. இரண்டு நாளைக்காவது சாப்பாட்டுக்கு ஆகும்” என்று சொன்னான் சமயோசிதம். அவன் சொன்னபடியே செத்துப் போன மாட்டின் தோலை உரித்துக் காயவைத்தான். கறியை வெட்டித் துண்டு

துண்டாக்கித் தன் மனைவியிடம் கொடுத்தான். அதன் குடல் பை ஒன்றிலே அதன் இரத்தத்தைப் பிடித்து நிரப்பி வைத்தான். பிறகு இருட்டு வந்தவுடன் எல்லோரும் பேசாமல் படுத்துத் தூங்கி விட்டார்கள்.

பக்கத்தூர்ச் சந்தையில் போய் அந்த மாட்டுத் தோலை விற்று விட்டு வருவதற்காக நள்ளிரவிலே வீட்டை விட்டுப் புறப்பட்டான் சமயோசிதம். தோளில் மாட்டுத் தோலைப் போட்டுக் கொண்டு இருட்டிலே அவன் போய்க் கொண்டேயிருந்தபோது, பின்னால் யாராரோ விரைந்து நடந்து வரும் ஓசையும் பேச்சுக் குரலும் அவன் காதில் விழுந்தன. அவர்கள் திருடர்களாக இருக்கக் கூடும் என்று பயந்து அவன் பக்கத்தில் இருந்த மரம் ஒன்றிலே ஏறி உட்கார்ந்து அந்தமாட்டுத் தோலைக் கொண்டு தன் உடலைப் போர்த்திக் கொண்டான். அவர்கள் தன்னைக் கடந்து போனபின் கீழே இறங்கலாம் என்று அவன் எண்ணியிருந்தான்.

ஆனால் அவன் மறைந்திருந்த மரத்தின் அடியிலேயே அவர்கள் வந்து கூடினார்கள். அங்கு கூடிய நான்கு பேரும் நான்கு சாக்குப் பைகளிலே ஏதோ கொண்டு வந்து தரையில் கொட்டினார்கள். பிறகு ஒருவன் கையில் கொண்டு வந்திருந்த லாந்தர் விளக்கை ஏற்றினான். கீழே கொட்டிய தங்க நாணயங்கள் முழுக்க அந்த விளக்கு வெளிச்சத்தில் மின்னின. அவர்கள் அந்த நாணயங்களைத் தங்களுக்குள் பங்கு வைத்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் திருடர்கள்தாம் என்று உறுதியாகத் தெரிந்தவுடனே சமயோசிதத்தின் உடலெல்லாம் வெட வெடவென்று நடுங்கியது. அந்த நடுக்கத்தில் மரக்கிளையாடி இலைகள் ஒன்றுடன் ஒன்று உராய்ந்து, பயங்கரமான சலசலப்பை உண்டாக்கின. அவன் பற்களும் கிடுகிடுவென்று தந்தியடித்தன.

இந்த ஓசைகளைக் கேட்ட திருடர்கள் மேலே நிமிர்ந்து பார்த்தார்கள். அவர்களிலே ஒருவன் "யார்

அது?'' என்று சத்தம் போட்டான். உடனே, பீதியை அடக்கமாட்டாமல் சமயோசிதம் “ஊய்” என்று கூச்சலிட்டு விட்டான். அப்போது அவன் போர்த்தியிருந்த மாட்டுத் தோல் நழுவிக் கீழே திருடர்களின் மேல் விழுந்தது ''ஊய்'' என்ற பயங்கரமான சத்தத்தையும் இரண்டு கொம்புடன் கறுப்பாகத் தங்கள் மேல் விழுந்த அந்த கரிய பொருளையும் கண்ட திருடர்கள் ஏதோ பூதம்தான் தங்களை அமுக்க வருகிறதென்று எண்ணிப் பயந்து, அலறியடித்துக் கொண்டு தாங்கள் கொள்ளையடித்துக் கொண்டு வந்த பொருளை விட்டு விட்டு அங்கிருந்து பாய்ந்தோடினார்கள்.

அவர்கள் போய் நெடு நேரத்திற்குப் பிறகு ஒருவாறு பயம் தெளிந்து சமயோசிதம் கீழே இறங்கி வந்தான். கீழே கொட்டிக் கிடந்த தங்க நாணயங்களை யெல்லாம் சாக்குப் பைகளில் அள்ளிப் போட்டு நிரப்பினான். பிறகு அவற்றை மாட்டுத் தோலில் வைத்து மூட்டையாகக் கட்டி அதை இழுத்துக் கொண்டு தன் வீட்டுக்குப் போனான். மிகவும் கனமாக இருந்த அதைப் பெரும் பாடுபட்டு இழுத்துச் சென்று வீட்டில் சேர்த்தவுடன், தன் மனைவியை எழுப்பித் தங்க நாயணங்களைத் தன்னுடன் கூட இருந்து எண்ணும்படிச் சொன்னான். மறுநாள் பகல் வரையிலே அவர்கள் உட்கார்ந்து எண்ணியும் தங்க நாணயங்களில் பாதியளவுகூட எண்ணி முடிக்கவில்லை.

“நம்மிடம் படியிருந்தால் எளிதாக அளந்து இத்தனை படியென்று கணக்குச் செய்து விடலாம்” என்று தோட்டக்காரன் மனைவி சொன்னாள்.

“அந்த அரக்கனிடம் அளவுப்படி நிச்சயம் இருக்கும். அவனுக்கு வேண்டிய பொன்னும் பொருளும் இருந்தும் அவன் நம்மை வாடகை கொடு என்று சொல்லி வாட்டி வதைக்கிறான்.” என்று சொல்லிக் கொண்டிருந்த சமயோசிதத்துக்குத் திடீர்

என்று ஒரு யோசனை தோன்றியது. அவனும் அவன் மனைவியும் காதுக்குள் சிறிது நேரம் குசுகுசுவென்று பேசிக் கொண்டார்கள்.

அதன்பின் தோட்டக்காரன் மனைவி நல்ல சேலையொன்றைக் கட்டிக்கொண்டு அரக்கனுடைய மாளிகைக்குச் சென்றாள். சமையற்கட்டுப் பக்கம் இருந்த கதவை அவள் மெதுவாகத் தட்டினாள். அரக்கனுடைய வேலைக்காரன் வந்து கதவைத் திறந்தான். "ஐயா! கொஞ்ச நேரம் உங்கள் வீட்டு மரக்கால் படியைக் கொடுக்கிறாயா? என் கணவர் கொஞ்சம் பொன் கொண்டு வந்திருக்கிறார். அதை அளக்க எங்கள் வீட்டில் படி ஒன்றும் இல்லை" என்றாள் தோட்டக்காரன் மனைவி ஆவுடையாள்.

வேலைக்காரன் அவளை வியப்போடு நோக்கினான். "பொன் அளக்கப் படி வேண்டுமா?" என்று நம்பிக்கையில்லாத குரலில் கேட்டான். பேச்சுக்குரலைக் கேட்டுவிட்டு அரக்கன் மனைவியான பெருவாய் பேச்சி அங்கே வந்தாள்.

தோட்டக்காரன் மனைவியைப் பார்த்தவுடன் அந்த அரக்கி, "உனக்கென்னடி தைரியம்? இந்த வருடம் கொடுக்க வேண்டிய வாடகைப் பணத்தை உன் கணவன் இன்னும் கொடுக்கவில்லை. நீ எப்படி இங்கே இவ்வளவு துணிச்சலாக வந்து விட்டாய்? போ! போ!" என்று விரட்டினாள்.

உடனே தோட்டக்காரன் மனைவி ஆவுடையாள் மிகவும் மரியாதையாக, அந்த அரக்கியின் முன் தலைவணங்கி, "அம்மா பெருவாய் பேச்சி! இனிமேல் பாக்கி வைக்கமாட்டோம். என் கணவருக்கு இப்போது கொஞ்சம் அதிர்ஷ்டம் வந்துவிட்டது. அவர் நிறையத் தங்கம் கொண்டு வந்திருக்கிறார். அவ்வளவு தங்கம் நீங்கள் கூட இதுவரை பார்த்திருக்க மாட்டீர்கள். அதை அளப்பதற்குப் படி வாங்குவதற்காகத் தான்

நான் இங்கே வந்தேன். இப்போது உங்கள் வேலைக்காரரிடம் அதைத்தான் கேட்டுக் கொண்டிருந்தேன்!" என்று சொன்னாள்.

"தங்கம் அளக்கப் படி வேண்டுமா? உனக்கென்ன பைத்தியம் பிடித்து விட்டதா?" என்று கேட்டாள் அரக்கி.

"எனக்கொன்றும் பைத்தியமில்லையம்மா! உண்மையைத் தான் சொல்கிறேன்" என்றாள் ஆவுடையாள்.

"மூடமே! உளறாதே!" என்று கூறினாள் அரக்கி. அவளால் நம்பமுடியவில்லை.

அரக்கி, "இருக்காது" என்று கூற ஆவுடையாள், "உண்மைதான்" என்று கூற இப்படியாகப் பெண்கள் மாறி மாறிப் பேசிக் கொண்டிருக்கும் போது, அவர்கள் போட்ட கூச்சலில் சரியாகத் தூங்கமுடியாத அரக்கன் பெருந்தலைப் பிரசண்டன் கோபத்தோடு உறுமிக்கொண்டே அங்கு எழுந்து வந்தான். தோட்டக்காரன் மனைவியைக் கண்டவுடனே அவன் கடுமையான குரலில், "நீ தானா? சரி. உன் கணவனிடம் சொல்லி விடு. நாளைக்கு அவன் ஒழுங்காக வாடகைப் பணத்தை எண்ணிக் கொடுக்காவிட்டால் நான் சும்மா விடப்போவதில்லை." என்று கண்டிப்பாகக் கூறினான்.

ஆவுடையாள் அவன் முன்னால் மரியாதையாகத் தலை வணங்கி நின்று, "ஐயா, பெருந்தலைப் பிரசண்டப் பெருமானே! தங்களுக்குரிய வாடகைப் பாக்கியைத் தவறாமல் கொடுத்துவிடத் தான் என் கணவர் விரும்புகிறார். வேண்டுமானால் நீங்கள் இன்றே கூட வந்து வாங்கிக் கொள்ளலாம். அவருக்கு இப்போது கொஞ்சம் அதிர்ஷ்டம் வந்திருக்கிறது. எல்லாம் உங்கள் தயவால்தான். நீங்கள் மாட்டைக்

கொல்லாமல் இருந்திருந்தால், அவர் அதன் தோலையுரித்தெடுத்துச் சந்தைக்கு விற்கக் கொண்டு போயிருக்கவும் மாட்டார். நான்கு சாக்குப் பை தங்கத்தோடு திரும்பி வந்திருக்கவும் மாட்டார். அதற்காகத் தங்களுக்கு நாங்கள் மனப்பூர்வமாக நன்றி கூறுகிறோம்! இப்பொழுது அவ்வளவு பொற் காசுகளையும் அளக்க எங்களிடம் எதுவும் இல்லை. அதற்காகத் தான் உங்களிடமிருந்து படி வாங்கிக் கொண்டு போகலாம் என்று வந்தேன்" என்றாள்.

அவள் சொல்லுவதெல்லாம் மொட்டைப் பொய் என்று சொல்லிச் சுமார் ஐந்து நிமிடம் வரை அரக்கன் அவளைத் திட்டினான். கடைசியில் ஒருவாறு தணிந்து, "சரி, வா! நானே நேரில் வந்து பார்க்கிறேன்!" என்று சொல்லிப் புறப்பட்டான்.

அரக்கன் மலையிலிருந்து கீழே இறங்கி வரும்போது அவனுடன் கூடவே வருவதற்காக உடல் குலுங்கக் குலுங்க ஓடி வந்தாள் தோட்டக்காரன் மனைவி. தோட்டக்காரன் வீட்டில் அவன் தங்கநாணயக் குவியலின் மத்தியிலே உட்கார்ந்து கொண்டிருப்பதை நேரில் பார்த்த அரக்கன் ஆச்சரியத்தால் வாய்பிளந்து நின்று கொண்டிருந்தான். அவன் ஆச்சரியம் சிறிது தணிந்து பேசக்கூடிய நிலை வந்தவுடன், "இவ்வளவு பொன்னும் நீ கொண்டு போன ஒரு மாட்டுத் தோலுக்காகவா கிடைத்தது? இது உண்மைதானா?" என்று கேட்டான்.

"உண்மைதான் பெருந்தலைப் பிரசண்டரே! இதோ பாரும் நான்கு சாக்குப் பைகள்!" என்று தலை நிமிர்ந்து பதில் கூறினான் சமயோசிதம்.

"சரி, நான் வருகிறேன்!" என்று அரக்கன் சொல்லிவிட்டு வாடகைப் பணம் கூடக் கேட்காமல் அவசரமாகத் திரும்பிச் சென்றான்.

தங்கள் தந்திரம் பலித்ததென்று சமயோசிதமும் அவன் மனைவியும் ஒருவரையொருவர் பார்த்து வாய் கிழியச் சிரித்தார்கள்.

அரக்கனுக்குச் சொந்தமான பசுக்கள் மொத்தம் நாற்பது இருந்தன. அவை அனைத்தும் மலையின் மறு சரிவில், மேய விடப்பட்டிருந்தன. நாற்பது பசுக்களுக்கும் எவ்வளவு சாக்குப் பொன் கிடைக்கும் என்று நடந்து செல்லும் போதே கூட்டிப் பார்த்துக் கொண்டான் அரக்கன். நான்கு நான்காக நாற்பது தடவையும் கூட்டிய பிறகு நூற்று அறுபது சாக்கு கணக்கு வந்தது. உடனே அவன் ஓட்டமும் நடையுமாகத் தன் மாளிகைக்கு வந்து சேர்ந்தான். தன் வேலைக்காரனைக் கூவியழைத்தான். "போ! போ! உடனே போ! என் பசுக்கள் எல்லாவற்றையும் கொன்று தோலையுரித்து எடு! அந்தத் தோலையெல்லாம் பக்கத்து ஊர் சந்தைக்குக் கொண்டு போ. ஒரு தோலுக்கு நான்கு சாக்குத் தங்கம் வீதம் விற்றுக் கொண்டு வா. உடனே தாமதிக்காமல் இன்றே சந்தைக்குப் போய்விடு. நீ தாமதித்தால் மாட்டுத்தோல் விலை இறங்கி விடக்கூடும். போ! போ! சீக்கிரம் போ!" என்று வேலைக்காரனை ஏவினான்.

கட்டளையிட்டபடியே வேலைக்காரன் நடந்தான். ஆனால் அவன் சந்தைக்குப் போய் மாட்டுத் தோலை வைத்துக் கொண்டு விலை கூறியபோது எல்லோரும் அவனைப் பார்த்துக் கேலி செய்து சிரித்தார்கள். அதுதான் மாட்டுத் தோலுக்கு அப்போது உள்ள விலைவாசி என்று வாதாடினான். ஆனால் அவனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்று எல்லோரும் பரிகாசம் பண்ணினார்கள். கடைசியில் அவன் மாட்டுத் தோல் ஒன்று ஒரு ரூபாய் வீதம் விற்றுவிட்டு வீட்டுக்குத் திரும்பி வந்தான்! மாளிகையில் அவனுக்கு எப்படிப்பட்ட வரவேற்புக் கிடைத்திருக்கும் என்பதை எளிதாக யூகித்துக் கொள்ளலாம்.

கீழே தோட்டக்காரன் வீட்டில் எல்லோரும் சாப்பிடுவதற்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். குழம்பு அப்போது தான் அடுப்பில் கொதித்துக் கொண்டிருந்தது. அந்தச் சமயம் அரக்கன் வருகிறானா என்று காவல் காத்துக் கொண்டிருந்த பெரிய பெண் "அப்பா! அப்பா! அரக்கன் மலையில் இருந்து இறங்கிக் கொண்டிருக்கிறான்!" என்று அலறிக் கொண்டு ஓடி வந்தாள்.

இதை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சமயோசிதம் "சிக்கிரம்! சிக்கிரம்! இந்தச் சட்டியை வெளியில் தூக்கிச் செல்ல வேண்டும். கூட ஒரு [redacted] பிடி!" என்று தன் மனைவியிடம் கூறினான்.

அவன் மனைவி ஆவுடையாளும் அவனும் கந்தைகளை வைத்துப் பிடித்துக் கொண்டு குழம்புச் சட்டியை வெளியில் இருந்த புல் தரையில் கொண்டுவந்து வைத்தார்கள். பிறகு சமயோசிதம் ஒரு சவுக்கை எடுத்துக் கொண்டு, அந்தக் குழம்புச் சட்டியை ஓங்கி ஓங்கி அடித்தான். "சட்டியே, சிக்கிரம், சிக்கிரம்! நாங்கள் பசியோடு காத்துக் கொண்டிருக்கிறோம்!" என்று கூறிக் கொண்டே அதை ஓங்கி ஓங்கி அடித்தான்.

அப்போது அரக்கன் தன் தண்டாயுதத்தை ஓங்கிக் கொண்டே, "புரட்டுக்காரத் திருட்டுப் பயலே! இரு, இரு! இதோ உன்னை என்ன சேதியென்று விசாரிக்கிறேன்" என்று கூவியபடி நெருங்கினான். ஆனால் சமயோசிதம் அவனை கவனிக்காமல், சட்டியை ஓங்கி ஓங்கிச் சவுக்கால் அடித்துக் கொண்டிருந்தான். இதைக் கண்ட அரக்கன் பெருந்தலைப் பிரசண்டன், வியப்பினால் செத்த பிணம்போல் நின்று விட்டான். "தோட்டக்காரா! என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா?" என்று கேட்டான்.

அரக்கன் குரலைக் கேட்டதும் ஆச்சரியமடைந்தவன் போல் தலை நிமிர்ந்து பார்த்த சமயோசிதம், "ஐயா! சாப்பாட்டிற்காக குழம்பு வைத்துக் கொண்டிருக்கிறேன், இப்போதுதான் ஒரு கொதி வந்திருக்கிறது!" என்றான்.

"முட்டாளே! அடுப்பில்லாமல், நெருப்பில்லாமல் புல்தரையின் மீது வைத்துக் கொண்டு எப்படி குழம்பு வைப்பாய்?" என்று உறுமினான் அரக்கன்.

"ஐயா! உங்களுக்கு விஷயம் தெரியாது. இது ஒரு மாயச் சட்டி. இது நெருப்பில்லாமலே எதையும் சமைக்கக் கூடியது. ஒன்றிரண்டு நிமிடங்கள் இதைச் சவுக்கினால் அடித்தால் போதும். உடனே, கொதி வந்து உள்ளேயிருக்கும் பொருள் வெந்து சமையலாகி விடும்" என்றான் தோட்டக்காரன்.

"பொய்! பொய்! வடிகட்டின பொய்!" என்று சொல்லிக் கொண்டே நெருங்கி வந்து குழம்புச் சட்டியை நோக்கினான் அரக்கன். அப்போதுதான் அடுப்பிலிருந்து இறக்கி வைத்த சட்டியாகையால், அதில் இருந்த குழம்பு தளதளவென்று கொதித்துக் கொண்டிருந்தது. கறியின் வாசனையோடு ஆவி வந்து கொண்டிருந்தது! அரக்கனுக்குத்தான் இன்னும் சாப்பாடு முடிக்கவில்லை என்பது ஞாபகத்துக்கு வந்தது! "நான் இந்தச் சட்டியைக் கொண்டு போகிறேன். எனக்கு இது மிகவும் பயனுள்ளதாயிருக்கும்" என்று சொன்னான் அரக்கன்.

"ஐயா, விறகு விலை அநியாயமாயிருக்கிறது. என் சட்டியை விட்டுவிட்டு நான் என்ன செய்வேன்?" என்று வருத்தப்படுபவன்போல் நடித்தான் சமயோசிதம்.

"சமைக்காமலே சாப்பிடு!" என்று அரக்கன் அகங்காரத்தோடு கூறிவிட்டு அருகில் கிடந்த கந்தையை எடுத்துக் கொதிக்கின்ற அந்தச் சட்டியைக்

குழம்போடு சேர்த்துத் தூக்கிக் கொண்டு மலை மேலிருந்த தன் மாளிகைக்குச் சென்றான். அவன் தலை மறைந்தவுடன் சமயோசிதமும் அவன் குடும்பத்தினரும் விலா நோகச் சிரித்தார்கள்.

அரக்கன் தன் மாளிகைக்குப் போய்ச் சேரும் சமயம், சட்டி சூடு தணிந்து விட்டது. எத்தனை முறை சவுக்கால் அடித்தும் அது திரும்பக் கொதிக்கவில்லை. அரக்கனுடைய மடத்தனத்தைக் கண்டு அவனுடைய வேலைக்காரன் வாய்க்குள் சிரித்துக் கொண்டான். அரக்கி பெருவாய் பேச்சியோ வெளிப்படையாகவே அவனை, “முட்டாள்! முட்டாள்!” என்று புத்தி வரும் படியாகத் திட்டினாள். குழம்புச் சட்டியைச் சவுக்கால் அடித்து அடித்து அரக்கனுடைய கை வலித்து விட்டது. கடைசியில் அவன் ஆத்திரத்தோடும் கோபத்தோடும், “இருக்கட்டும். நாளைக்கு அந்தத் தோட்டக்காரப் பயலை என்ன பாடுபடுத்துகிறேன் பார்! அவன் இந்த உலகத்தில் பிறந்ததே தப்பு என்று நினைக்கும்படியாகச் செய்து விடுகிறேன்” என்று வஞ்சினம் கூறினான்.

மறுநாள் அதிகாலையில் மலைப்பக்கம் காவல் இருந்த சமயோசிதத்தின் பெரிய பையன் ஓடிவந்து பெரும் பீதியோடு “அப்பா! அப்பா! அரக்கன் மலையிலிருந்து இறங்கிக் கொண்டிருக்கிறான்” என்று கூவினான்.

எப்படியும் அரக்கன் திரும்பி விடுவான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்த சமயோசிதம், செத்துப்போன பசு மாட்டின் இரத்தத்தை நிரப்பி வைத்திருந்த குடல் பையை எடுத்துத் தன் மனைவியின் கழுத்தில் கட்டித் தொங்கவிட்டான். பிறகு சேலை முந்தானையால் அதை மூடி மறைத்துக் கொள்ளச் செய்தான்.

"இப்போது நீ சரியாக நாடகம் ஆட வேண்டும்!" என்று அவளை எச்சரித்து வைத்தான் சமயோசிதம். ஆவுடையாளும் சரி என்றாள்.

கோபமாக உறுமித் திட்டிக் கொண்டே அரக்கன் தோட்டத்திற்குள் நுழைந்தவுடனேயே, வீட்டிற்குள் தோட்டக்காரனும் அவன் மனைவியும் ஒருவரையொருவர் வைது கொள்ள ஆரம்பித்தார்கள். "துப்புக் கெட்டவளே! சீர்கெட்டவளே! துடைப்பக்கட்டையே!" என்று திட்டினான் சமயோசிதம்.

"குடிகாரனே! அறிவு கெட்டவனே! உபயோகமற்றவனே!" என்று வசைபாடினாள் அவன் மனைவி. அதோடு நில்லாமல் ஒரு மரக்கம்பை எடுத்துக் கொண்டு அவனை அடிக்கப் போனாள் மனைவி.

அரக்கனுடைய கூப்பாட்டையும் அடக்கும்படியான கூச்சல் போட்டு கணவன் மனைவி இருவரும் சச்சரவிட்டுக் கொண்டிருந்தார்கள். கோபமாக வந்த அரக்கன், என்றும் அடித்துக் கொள்ளாத தம்பதிகள் அன்று அப்படி ஆக்ரோஷமாகச் சண்டையிட்டுக் கொள்வதைப் பார்த்து ஆச்சரியப்பட்டுக் கதவோரமாக நின்று கொண்டே கவனித்தான். திடீரென்று சமயோசிதம் ஒரு பெரிய கத்தியைக் கையில் எடுத்துக் கொண்டு தன் மனைவியின் நெஞ்சிலே குத்தினான். அந்தக் கத்தி நெஞ்சுக்கு நேரேயிருந்த பசு மாட்டு இரத்தம் அடங்கிய குடல் பையைக் குத்திக் கிழித்ததால், இரத்தம் பீறிட்டுக் கொண்டு வழிந்தது. தோட்டக்காரன் மனைவி பயங்கரமாக அலறிக்கொண்டு செத்தவள் போல் கீழே விழுந்து விட்டாள். பிறகு அவள் உடல் அசையவேயில்லை. பேச்சு மூச்சில்லாமல் பிணம்போல் கிடந்தாள்.

"பாவி! கொலைகாரா! முதலில் உன்னுடைய தந்திரத்தால் நான் அருமையாக வளர்த்த

பசுக்களையெல்லாம் கொல்லும்படிச் செய்தாய். இப்போது என் கண்முன்னாலேயே உன் மனைவியைக் கொலை செய்து விட்டாய். மறுபடியும் நீ இந்தப் பாதகச் செயல்களைச் செய்யாமல் இருக்க உன்னைத் தூக்கு மரத்தில் தான் கட்டித் தொங்கவிட வேண்டும்" என்று அரக்கன் கூவிக் கொண்டே வீட்டின் உள்ளே வந்தான்.

அப்போதுதான் அரக்கன் வந்ததைக் கவனித்தது போல, சமயோசிதம், "ஐயா, அரக்கரே, வாருங்கள்! வணக்கம்! என் மனைவியைப் பற்றி நீங்கள் கவலைப்படவே வேண்டாம். ஏனென்றால் இது அடிக்கடி நடக்கக் கூடிய காரியம்தான். நான் கொஞ்சம் முன் கோபக்காரன் என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே! கோபத்தில் இப்படித் தான் அவளை நான் கத்தியால் குத்தி விடுவேன். ஆனால், அவளுக்கு அதனால் ஒன்றும் கெடுதல் இல்லை. ஏனென்றால் என்னிடம் இருக்கும் இந்த மாயத்துருத்தி மிகவும் உபயோகமாயிருக்கிறது" என்று சொல்லி அடுப்படியில் இருந்த துருத்தியை எடுத்துவந்தான். அதைத் தன் மனைவியின் மூக்குத் துவாரத்தில் வைத்து மெல்ல மெல்ல ஊதினான். சிறிது நேரத்திற்குப்பின் மெதுவாக எழுந்து உட்கார்ந்தாள் மனைவி. அவள் அப்போதுதான் அரக்கனைக் கண்டது போல, "ஐயா, இப்படிப் பட்ட நேரத்திலா நீங்கள் இங்கு வரவேண்டும்? எங்களுக்குள் சண்டை நேர்ந்து இவர் என்னைக் கொல்லும் சமயத்திலா நீங்கள் வந்து சேர வேண்டும்? இப்படிப்பட்ட கண்ணராவிக் காட்சியையா நீங்கள் பார்க்க வேண்டும்?" என்று கேட்டாள்.

அரக்கன் அவளுடைய அங்கலாய்ப்பை யெல்லாம் சிறிதும் கவனிக்கவில்லை. அவன் பார்வை முழுவதும் தோட்டக்காரன் கையிலிருந்த துருத்தியின் மீதே பதிந்திருந்தது. "அந்தத் துருத்தி எனக்குப் பயன்படக்

கூடும். அதைக் கொடுத்துவிடு" என்று கேட்டான் அரக்கன்.

"ஐயா மறுபடியும் என் மனைவியைக் கொன்ற பிறகு என்ன செய்வது?" என்று கேட்டான் சமயோசிதம்.

"புதைத்துவிடு!" என்று சொல்லிவிட்டு அரக்கன் அந்தத் துருத்தியைப் பறித்துக் கொண்டு தன் மாளிகைக்குத் திரும்பினான். சமயோசிதமும் அவன் குடும்பத்தாரும் இடுப்பு வலிக்கச் சிரித்தார்கள்.

மாளிகைக்கு வந்த அரக்கனை அவன் மனைவி பெருவாய்ப் பேச்சி, வாசலிலேயே சந்தித்தாள். "அந்தத் தோட்டக்காரனிடம் உங்கள் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொண்டாயா?" என்று அவள் கேட்டாள்.

"நான் ஆத்திரத்தையே மறந்து விட்டேன். ஆனால் என் அருமை அரக்கியே! இதோ பார்! ஓர் அருமையான பொருளைக் கொண்டு வந்திருக்கிறேன். இது ஒரு மாயத்துருத்தி. இறந்தவர்களைத் திரும்பவும் மூச்சுவிடச் செய்யும் இந்த அதிசயத் துருத்தி!" என்று பெருமையுடன் சொன்னான் அரக்கன்.

"ஐயோ! மறுபடியும் அந்தத் தோட்டக்காரன் உன்னை ஏமாற்றி விட்டானா? இந்த உலகத்திலேயே உன்னைக் காட்டிலும் பெரிய முட்டாள் யாரும் இருக்கமாட்டார்கள் போலிருக்கிறதே!" என்று அரக்கி பெருவாய்ப் பேச்சி பெரிதாகப் பேச ஆரம்பித்தாள். அரக்கன் அவளை இடைமறித்துப் பேச முயன்றான். ஆனால், அவள் இடைவிடாமல் அவன் ஏமாந்து போனதைக் குறித்து தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தாள். அவள் பேசும்போது அரக்கன் குறுக்கே பேச முயன்றபோதெல்லாம் இப்படித்தான் தோல்வி காண்பது வழக்கம். இந்த வழக்கத்தை மாற்ற

அவளுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டுமென்று அரக்கன் எண்ணினான்.

உடனே அவன் ஒரு கத்தியை எடுத்து அவளுடைய குரல்வளையை இரண்டு பக்கமும் காதுவரை கிழித்து விட்டான். அவள் இந்த நிலையில் இறந்து போனாள். அவளுக்கு நன்றாகப் புத்தி வரவேண்டும் என்பதற்காக மத்தியானம் வரையில் அவளைச் செத்த நிலையிலேயே வைத்திருந்து பிறகுதான் உயிர்ப்பிக்க வேண்டும் என்று அரக்கன் நினைத்திருந்தான்.

மத்தியானம் வந்தது! அவனுக்கு வயிற்றுப்பசியும் எடுத்தது. மனைவியை உயிர்ப்பித்துச் சோறு போடச் செய்ய வேண்டும் என்று தோன்றியது. தோட்டக்காரனிடம் பறித்துவந்த துருத்தியை எடுத்து அரக்கியின் மூக்கிலே பொருத்தி ஊது ஊது என்று ஊதினான். அவன் முகம் வீங்கிச் சிவக்கும்வரை ஊதினான். ஆனால் அரக்கி செத்தபடியேதான் கிடந்தாள்!

கடைசியில் அரக்கன் தான் ஏமாற்றப்பட்டதை உணர்ந்தான். தன் முட்டாள்தனத்தால் அருமை மனைவியை இழந்த துக்கம் தாங்காமல் தலைமயிரைப் பிய்த்துக் கொண்டு மாளிகை அதிரும்படியாகக் கூச்சலிட்டுக் கொண்டு அங்குமிங்கும் ஓடினான். அவன் மனைவி அப்படி ஒன்றும் அழகியல்ல; அவன் அன்பை கவர்ந்தவளுமல்ல - அவள் ஒரு பெரிய வாயாடிதான். எப்போதும் அவளிடம் சச்சரவிட்டு வாயாடித்தனமாக ஏதாவது பேசிக் கொண்டுதான் இருப்பாள். ஆனால், சுவை சுவையாக உணவு சமைப்பதிலே பெரிய கெட்டிக்காரி! அவனுடைய வேலைக்காரனுக்கோ உளுந்துக்கும் கடுகுக்கும் வித்தியாசம் தெரியாது. ஆகவே தான் அரக்கன் தன் மனைவியை இழந்தது பற்றி அவ்வளவு தூரம் வருந்தினான்.

மலையடிவாரத்தில், தோட்டக்காரன் சமயோசிதம் அப்போதுதான் மத்தியானச் சாப்பாட்டை முடித்து விட்டு, அன்று அவன் மனைவி அவனுக்காக வைத்திருந்த பாயாசத்தை அருந்திக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் அரக்கன் பிரசண்டனும் அவன் வேலைக்காரனும் ஆத்திரத்தோடு கீழே இறங்கி வந்து கொண்டிருந்தார்கள். இந்தச் சமயம் எல்லோருக்கும் கடைசியான நான்காவது பெண் குழந்தை மலைப் பக்கத்தைக் கவனித்துக் காவல் செய்து கொண்டிருந்தாள். அவள் அரக்கனும் அவனுடைய வேலைக்காரனும் இறங்கி வருவதைக் கண்டதும் பயந்து கீச்சுக்குரலில் கத்திக் கொண்டு வைக்கோல் போருக்குக் கீழே போய் மறைந்து கொண்டாள். அவளுடைய கீச்சுக்குரல் சமயோசிதத்தின் காதில் விழவில்லை.

ஆகவே, இந்தச் சமயம் யோசனை செய்வதற்கு நேரமும் வாய்ப்பும் இல்லாதவகையில் சமயோசிதம் அரக்கனிடம் மாட்டிக் கொண்டான். எப்போதும் அதிர்ஷ்டம் ஒருவனுக்கு துணையிருக்க முடியாது என்பது அப்போது மெய்யாகி விட்டது. அரக்கன் அப்படியே சமயோசிதத்தின் குடுமியைப் பிடித்துத் தூக்கி தன் வேலைக்காரன் திறந்து பிடித்துக் கொண்டிருந்த சாக்குக்குள் அவனைப் போட்டான். பிறகு வேலைக்காரன் சாக்குப் பையின் வாயைக் கட்டித் தன் தோள்மீது தூக்கிக் கொண்டான்.

சாக்குப் பைக்குள் இருந்த சமயோசிதத்தைத் தூக்கிக் கொண்டு அரக்கனும் அவனுடைய வேலைக்காரனும் ஆற்றுக்குப் போனார்கள். ஆறு இரண்டு மைல் தூரத்தில் இருந்தது. அப்போது மத்தியான நேரமாக இருந்தபடியால் வெயிலும் அதிக வெப்பமாக இருந்தது. வழியில் ஒரு கள்ளுக்கடை தென்பட்டது. அந்தக் கள்ளுக்கடை வாசலுக்கு வந்தவுடன், அரக்கன் பிரசண்டன் சாக்கை இறக்கிக் கீழே வைக்கும்படி வேலைக்காரனுக்கு

உத்தரவிட்டான். "எனக்குத் தாகமாக இருக்கிறது. நான் கொஞ்சம் கள்ளுக் குடித்து விட்டு வரவேண்டும். இன்று இந்தப் புரட்டுக்காரனைத் தீர்த்துக் கட்டப் போகிறோம். ஆகையால், உனக்கும் ஒரு மொந்தை கள் வாங்கித் தருகிறேன் வா" என்று அழைத்தான் அரக்கன்.

வேலைக்காரன் இதைக் கேட்டு பெருங் களிப்பு கொண்டு அரக்கன் பின்னாலேயே கள்ளுக் கடைக்குள் நுழைந்தான். கள்ளுக்கடை வாசலில் கட்டியிருந்த சாக்குக்குள்ளே சமயோசிதம் மட்டும் தனியாக இருந்தான்.

அவன் தன் மூச்சையெல்லாம் அடக்கி முண்டி முண்டிப் பார்த்தும் ஒன்றும் பலனில்லாமல் போய்விட்டது. ஏனென்றால் சாக்கு பலமாக கட்டப்பட்டிருந்தது. சமயோசிதம் தன் நம்பிக்கையை இழந்து விட்ட சமயத்தில் சாலையில் கழுதைகள் நடக்கின்ற சப்தம் கேட்டது. உண்மையில் பன்னிரண்டு கழுதைகளின் மேல் வியாபாரத்திற்குள்ள சரக்குகளை ஏற்றிக் கொண்டு அப்போது அந்த வழியாக ஒரு வியாபாரி சென்று கொண்டிருந்தான்.

"நண்பனே, என்னை அவிழ்த்து விடு; நல்ல நண்பனே! என்னை அவிழ்த்து விடு'' என்று கூவினான் சமயோசிதம்!

வியாபாரி தன் கழுதைகளை நிறுத்திவிட்டு சாக்கு மூட்டையின் அருகே வந்து, "நான் எதற்காக உன்னை அவிழ்த்து விட வேண்டும்?'' என்று கேட்டான்.

''எனக்குத் துன்பம் ஏற்பட்டிருக்கிறது. அதற்காகத்தான் உன் துணையை நாடுகிறேன். தயவுசெய்து என்னை அவிழ்த்து விடு" என்றான் சமயோசிதம்.

வியாபாரி சாக்கு மூட்டையின் மேல் தன் காலால் எட்டி உதைத்தான். "இந்தக் கழுதைகளைச் சந்தைக்கு ஓட்டிக் கொண்டு போய் எவ்வளவோ வியாபாரம் செய்ய வேண்டியிருக்கிறது. வழியில் சாக்கு மூட்டையில் கட்டப்பட்டுக் கிடப்பவர்களை யெல்லாம் அவிழ்த்து விட்டுக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. வேறு யாரையாவது பார்த்துக் கொள்!" என்று சொல்லி தன் சவுக்கை ஓங்கி வீசிக் கொண்டு "ஹை, ஹை" என்று தன் கழுதைகளைச் செலுத்தத் தொடங்கினான்.

"நில்! நில்! போய்விடாதே! நீ எனக்கு உதவி செய்யத்தான் வேண்டும். நானும் உன்னைப்போல் ஒரு வியாபாரிதான். ஒரு பெரிய பணக்காரன் என்னைத் தன் மாளிகைக்குத் தூக்கிக் கொண்டு போகிறான். அவனுடைய மகள் ஒரு வியாபாரியைத்தான் திருமணம் செய்து கொள்வேனென்று பிடிவாதம் செய்கிறாளாம். திருமணம் இன்றைக்கே நடக்கப் போகிறது. திருமணம் முடிந்ததும் தன் மகளுக்கு சீதனமாக பணக்காரன் பாதிச் சொத்தை எழுதி வைக்கப் போகிறான். ஆனால் எனக்கென்னவோ பணக்காரனாக வாழ்வது சுத்தமாகப் பிடிக்கவில்லை. அதோடு எனக்கு நல்ல மனைவி ஒருத்தியும் இருக்கிறாள்!" என்றான் சமயோசிதம்.

"இருந்தால் என்ன? உன்னைப் போன்ற நிலையில் நான் இருந்தால் இப்படி முட்டாள்தனமாக மறுக்கமாட்டேன்" என்று சொன்னான் வியாபாரி.

"அப்படியானால் நண்பனே, எனக்குப் பதிலாக நீ போகலாமே? போவது யாராக இருந்தாலும், அது ஒரு வியாபாரியாக இருந்தால் போதும் அந்தப் பெண்ணுக்கு!" என்றான் சாக்கு மூட்டைக்குள்ளிருந்த சமயோசிதம்.

வியாபாரி சிறிது நேரம் யோசித்தான். சமயோசிதமோ அதே சமயம் இந்த விவகாரம்

முடிவதற்குள் உள்ளே போன அரக்கன் திரும்பி வந்து விடக் கூடாதே என்று கடவுளை வேண்டிக் கொண்டான்.

சாக்கு மூட்டையை முடிந்து கட்டியிருந்த கயிற்றை வியாபாரி அவிழ்த்து விட்டான். சமயோசிதம் வெளியே வந்ததும் சாக்குக்குள்ளே வியாபாரி நுழைந்து கொண்டு, "இதோ பார்! என் கழுதைகளை இங்கேயே பக்கத்தில் ஒரு மரத்தடியில் நிறுத்தி வைத்து என் சரக்குகளைப் பத்திரமாகப் பார்த்துக் கொள். நான் போய் அந்தப் பணக்காரப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு சீதனப் பணத்திற்கும் நிச்சயமான ஏற்பாடு செய்து விட்டு வருகிறேன். இங்கே நீ என் சரக்குகளை ஒழுங்காகப் பார்த்துக் கொண்டால் திரும்பி வந்ததும் உனக்கு மொந்தைக் கள் வாங்கித் தருகிறேன்" என்றான்.

"உன் சரக்குகளை நான் பத்திரமாகப் பார்த்துக் கொள்கிறேன். அதைப்பற்றிச் சிறிதும் பயப்பட வேண்டாம்" என்று சொல்லிக் கொண்டே அந்த வியாபாரியைச் சாக்கு மூட்டைக்குள்ளே வைத்து நன்றாக இறுக்கிக் கட்டிவிட்டான் சமயோசிதம். பிறகு அவன் சவுக்கை எடுத்துக் கொண்டு கழுதைகளை வெகு வேகமாக அடித்து விரட்டிக் கொண்டு புறப்பட்டான். அவன் சாலை முனையில் திரும்பிய சமயத்தில் உள்ளே கள்ளுக்குடிக்கப் போன அரக்கனும், வேலைக்காரனும் திரும்பி வந்தார்கள். சாக்கு மூட்டையைத் தூக்கிக் கொண்டுபோய் ஆற்றிலே போட்டார்கள்.

அரக்கன் மிகுந்த ஆனந்தத்தோடு, "அந்தப் புரட்டுக்காரப் பயல் ஒழிந்தான்! இப்போதுதான் எனக்கு மன அமைதி ஏற்பட்டது. சரி வா! திரும்புவோம்" என்று சொன்னான். ஆனால் சம்பந்தமில்லாத யாரோ ஒரு வியாபாரி உயிரை இழந்தான் என்ற விஷயம் அவனுக்குத் தெரியாது!

சமயோசிதம் கழுதைகளை ஓட்டிக் கொண்டு சந்தைக்கு வந்தான். வசதியான ஓர் இடத்தைத் தேர்ந்து அந்த இடத்திலே கழுதைகளின் மேலிருந்த வியாபாரச் சரக்குகளைப் பரப்பி வைத்தான். அவையனைத்தும் வண்ணக் கண்ணாடித் துண்டுகள் இழைத்து வெள்ளியினால் செய்த மோதிரங்களும், மேகலைகளும், தலைச் சிட்டிகளும், வளையல்களும், பொத்தான்களுமாயிருந்தன. எல்லாம் நல்ல விலைக்குப் போயின. அவன் இவ்வாறு வியாபாரம் செய்து கொண்டிருந்த போது, அவனுக்கு நன்றாகப் பழக்கப்பட்ட அரக்கனுடைய குரல் அவன் காதிலே பட்டது. அவன் பீதியோடு தலை நிமிர்ந்து பார்த்தான்.

அரக்கனும், அவனுடைய வேலைக்காரனும் எக்களிப்போடு, ஒருவரோடொருவர் கைகோர்த்துக் கொண்டு சந்தையினூடே நடந்து வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் குடிவெறியில் ஆடி ஆடி அசைந்தசைந்து நடந்து வந்து கொண்டிருந்தார்கள். அரக்கன் தான் மிகவும் குடித்திருந்தான். அவன் தள்ளாடி விழப் போகும் போதெல்லாம் வேலைக்காரன் அவனைத் தாங்கிப் பிடித்து நிறுத்தினான். அரக்கன் எக்களிப்போடு பாடிக் கொண்டிருந்தான். இவ்வளவு ஆனந்தமான நிலையில் சமயோசிதம் அவனைப் பார்த்ததேயில்லை. அவன் கண்ணில் படாமல் தப்பிப்பதற்காகச் சமயோசிதம் ஒளிந்துக் கொள்ளக் கூடிய இடம் எங்காவது இருக்கிறதா என்று திரும்பித் திரும்பிப் பார்த்தான். ஆனால், அவன் தகுந்த இடத்தைக் கண்டு பிடிப்பதற்குள் அரக்கன் அவன் கடை எதிரே வந்து, வியப்போடு வாயைப் பிளந்து கொண்டு நின்றான்.

நடுங்கிக் கொண்டிருந்த சமயோசிதத்தின் பக்கம் அரக்கன் பிரசண்டன் தன் கையை நீட்டி, "தோட்டக்காரா! ஆற்றின் அடியில் இருக்க வேண்டிய நீ இங்கே எப்படி வந்தாய்? நான் தானே சற்று முன்

உன்னை ஆற்றில் போட்டு விட்டு வந்தேன்?" என்று கேட்டான்.

"ஆமாம்; பெருந்தலைப் பிரசண்டரே! நீங்கள் என்னை ஆற்றில் போட்டது உண்மைதான். அதற்காக நான் உங்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன். பார்த்தீர்களா, நான் ஆற்றின் அடியில் கண்டெடுத்த பொருள்களை! இவ்வளவு வியாபாரப் பொருள்களும், இவற்றைச் சுமக்கப் பன்னிரண்டு கழுதைகளும் எனக்கு அங்கே கிடைத்தன" என்றான் சமயோசிதம்.

''நீ ஓர் அதிர்ஷ்டக்காரன் என்பதில் சந்தேகமேயில்லை. ஆற்றின் அடியில் இவ்வளவு பொருள்கள் தான் இருந்தனவா? இல்லை, இன்னும் இருக்கின்றனவா?" என்று கேட்டான் அரக்கன்.

''இன்னும் ஏராளமான பொருள்கள் இருக்கின்றன. இவற்றைக் காட்டிலும் உயர்ந்த பொருள்கள் அவை. அத்தனையும் அசல் வைரத்தினாலும் தங்கத்தினாலும் செய்யப்பட்டவை. ஆனால், என்னைப் போன்ற ஓர் ஏழைத் தோட்டக்காரன் அப்படிப்பட்ட தங்கத்தையும் வைரத்தையும் வியாபாரம் செய்யவந்தால் அது சந்தேகத்திற்கிடமாகக் கூடும். நான் அவற்றைத் திருடிக் கொண்டு வந்திருப்பதாக எண்ணி அரச காவலர் பிடித்துக் கொண்டு போனாலும் போய்விடலாம். அதற்காகத் தான் இந்த சாதாரணப் பொருட்களை மட்டும் அள்ளிக் கொண்டு வந்தேன்!'' என்று வகையாகப் பொய் சொன்னான் சமயோசிதம்.

"ஆம்! ஆம்! நீ செய்தது புத்திசாலித்தனமான காரியம்தான்!'' என்று சொன்ன அரக்கன் தன் வேலைக்காரனை இழுத்துக் கொண்டு வந்த வழியே திரும்பலானான். "ஏ மரமண்டையே திரும்பிவா. உன்

குடிபோதையையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு வேகமாக நட. நாம் போவதற்கு முன் விஷயம் தெரிந்து எவனாவது ஆற்றுக்குப் போய் அந்தப் பொருள்களையெல்லாம் அள்ளிக் கொண்டு போய்விடப் போகிறான்!" என்று சொல்லி வெகு வேகமாக நடந்து சென்றான்.

அவர்கள் ஆற்றுக்குள் சாக்கு மூட்டையைப் போட்ட இடத்தில் அரக்கன் வந்து நின்றான். "கீழே போய்ப்பார்த்து, என்னென்ன இருக்கின்றன சொல்" என்றபடி அவன் வேலைக்காரனைத் தூக்கி ஆற்றுக்குள்ளே வீசியெறிந்தான். அந்த வேலைக்காரன் தண்ணீரில் மூழ்கி ஒரு முறை மேலே எழும்பினான். மூச்சுத் திணறிக் கொண்டு மேலே வந்த அவன் நீந்தத் தெரியாமல் திண்டாடினான். அரக்கனை உதவிக்கு வரும்படி கையைக் காட்டினான். "ஆ! நீ அருமையான வேலைக்காரன் தான்! தங்கத்தைப் பார்த்து விட்டாயா? இரு, இரு. இதோ நானும் வருகிறேன்" என்று சொல்லி அரக்கன் பிரசண்டனும் ஆற்றுக்குள்ளே குதித்தான். அவனுக்கும் நீந்தத் தெரியாது. ஆகவே அவர்கள் இருவரும் அந்த ஆற்றை விட்டுக் கரையேறி மலைமேலிருந்த மாளிகைக்குத் திரும்பவேயில்லை!

சமயோசிதம் சந்தையில் வியாபாரம் செய்து கிடைத்த பண மூட்டைகளையும், விலை போகாத மீதிச் சரக்குகளையும் கழுதை மேல் ஏற்றிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினான். விற்காத சரக்குகளை யெல்லாம் தன் மனைவி மக்களை அணிந்து கொள்ளச் சொல்லிக் கொடுத்தான். சில நாட்களுக்குப் பிறகு அரக்கன் பிரசண்டன் திரும்பிவரவில்லை என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டு அவனுடைய மாளிகையிலேயே போய் ஆனந்தமாக வாழ்ந்து வரலானான்.

## கதை : ஐந்து



# பாடும் கடலும் ஆடும் மாம்பழமும் பேசும் பறவையும்

சிவந்திபுர மன்னருக்கு தேவப்பிரியன் என்னும் ஒரு குமாரனைப் பெற்றுத் தந்துவிட்டு மகாராணி மாண்டுபோனாள். அவளை இழந்த துக்கம் ஆறிய சிறிது காலத்திற்குப் பிறகு சிவந்திபுர மன்னர் மற்றொரு ராணியை மணம் புரிந்து கொண்டார். பானுமதி என்னும் அந்தப் புதிய ராணி வயதில் இளையவள்; இறுமாப்பு மிகுந்தவள்; அதிகாரம்

செய்வதற்கு ஆணவ ஆசை அதிகம் படைத்தவள். யாருக்கும் தன்னைப் பிடிக்கவில்லை என்றாலும் எல்லோரும் தனக்குக் கீழ்ப்படிந்து அடங்கி நடக்க வேண்டும் என்று அவள் விரும்பினாள். அவள் வயதான சிவந்திபுர மன்னருக்கு இளைய ராணியாய் வந்து சேர்ந்ததும் அவள் விரும்பியதெல்லாம் நடந்தது.

ராஜகுமாரன் தேவப்பிரியனுக்கு இருபது வயது நடக்கும் போது சிவந்திபுர மன்னர் காலமாகிவிட்டார். ராஜகுமாரன் தேவப்பிரியன் அரியணை ஏறி சிவந்திபுரத்திற்குப் புதிய மன்னனாக முடிசூடிக் கொண்டான். இளம் வயதினனாக இருந்த தேவப்பிரியனும், அவனுடைய சிற்றன்னை பானுமதியும் ஒருவருடன் ஒருவர் சண்டையடித்துக் கொள்ளவில்லை. ஏனெனில், பானுமதிக்குச் சொந்தப் பிள்ளையொன்றும் கிடையாது. ஆகவே அவள்தன் மூத்தாள் மகனாகிய தேவப்பிரியனை வெறுத்து ஒதுக்கவில்லை. தேவப்பிரியனுக்கோ சின்ன வயதிலேயே அன்னை இறந்து விட்டாள். ஆகவே, சிற்றன்னையையே தன் அன்னையாக எண்ணி அவளிடம் அன்பு பாராட்டி வந்தான்.

தேவப்பிரியன் பல ஆண்டுகள் தன் ஆட்சியை நன்றாக நடத்தி வந்தான். ஒருநாள் அவன் வேட்டைக்குப் போகும் போது, வழியில் ஒரு குடியானவனுடைய குடிசையின் முன்னால் மூன்று பெண்கள் பேசிக் கொண்டிருந்தது அவன் காதில் விழுந்தது. குடியானவனின் மூன்று பெண்களும் முதல் நாள் இரவு தாங்கள் கண்ட கனவைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"நான் ஒரு சோற்றுக் கடைக்காரனைத் திருமணம் செய்து கொண்டதாக கனவு கண்டேன்" என்றாள் மூத்த பெண்.



“நான் ஒரு வேட்டைக்காரனைத் திருமணம் செய்து கொண்டதாகக் கனவு கண்டேன்” என்றாள் இரண்டாவது பெண்.

ஆனால் கடைசிப் பெண்ணான கோமளா ஒன்றும் பேசாமல் இருந்தாள்.

“தங்கையே; நேற்றிரவு, நீ என்ன கனவு கண்டாய்?” என்று அக்காமார் இருவரும் அவளைக் கேட்டார்கள்.

“என்னை அழகான ஓர் அரசர் மணம் புரிந்து கொண்டதாகக் கனவு கண்டேன். நான் இரட்டைக் குழந்தைகளுக்குத் தாயாகவும், அக்குழந்தைகளில் ஒன்று இளவரசனாகவும் மற்றொன்று இளவரசியாகவும் இருப்பதாகக் கனவு கண்டேன். என் இரண்டு குழந்தைகளும் இரண்டு பூக்களைப் போல் அவ்வளவு அழகாக இருந்தன!” என்றாள் கோமளா.

இவ்வாசகங்களை மறைவில் நின்று கேட்டுக் கொண்டிருந்த மன்னன் தேவப்பிரியன் உடனே அம்

மூன்று பெண்களும் இருக்குமிடத்திற்குத் தன் குதிரையைச் செலுத்தினான். அவர்கள் எதிரில் வந்ததும், கடைசிப் பெண்ணான கோமளாவை நீண்ட நேரம் உற்றுக் கவனித்தான். பிறகு அவன், "உன் கனவின்படியே நீ ராணியாவாய்!" என்று கூறினான்.

கோமளா உண்மையில் நல்ல அழகி, மன்னன் தேவப்பிரியன் அவள் அழகில் மயங்கினானோ அல்லது அன்று காலையில் மிகவும் மகிழ்ச்சியாக இருந்த அவன் மேலும் மகிழ்ச்சியாக இருக்க விரும்பினானோ அல்லது தன் சிற்றன்னையே ஏவலாட்களுக்கு உத்தரவு போட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்துப் பார்த்துச் சலித்துப் போய்விட்டானோ, என்னவோ தெரியவில்லை. அவன் அந்தக் குடியானப் பெண் கோமளாவைத் தன் குதிரையில் ஏற்றி வைத்துக் கொண்டு கடற்கரையோரமாக இருந்த தன் கோட்டைக்குப் போய் யாருடைய யோசனையையும் கேட்காமல் அவளை அங்கேயே அப்பொழுதே திருமணம் செய்து கொண்டு விட்டான்.

இதைக் கேள்விப்பட்ட அவனுடைய சிற்றன்னை பானுமதி எவ்வளவு கோபப்பட்டிருப்பாள் என்று எளிதாக யூகித்து கொள்ளலாம். ராஜாவின் மனைவியாக புதிய ராணியொருத்தி வந்து விட்டபடியால், இனிமேல் அவள் அரண்மனையில் முழுக்க முழுக்க அதிகாரம் செலுத்த முடியாது. அரண்மனைக்கு வருகின்ற விருந்தாளிகளை ஆடம்பரத்தோடு அவள் முன்னின்று வரவேற்க முடியாது. ராஜாவோடு அவன் மனைவியான ராணிதான் நின்று வரவேற்க வேண்டும். ராணி என்ற முறையில் நாட்டினர் கொடுக்கும் மரியாதை முழுவதும் புதியவளுக்கே கிடைக்கும். இவற்றை யெல்லாம் காட்டிலும் மோசமாகப் பானுமதிக்குத் தோன்றியது என்னவென்றால், தன்னைக் காட்டிலும் உயர்ந்த நிலைக்கு வந்திருப்பவள் ஓர் அரச குமாரியாகவோ அல்லது பிரபு மகளாகவோ இல்லாமல் ஒரு சாதாரணக் குடியானவன் மகளாக

இருந்ததுதான்! ஆனால், பானுமதி தன் கோபத்தையெல்லாம் மூடி மறைத்துக் கொண்டு, புதிய ராணியான கோமளாவை அன்போடு வரவேற்றாள். தன் மூத்தாள் மகனாகிய தேவப்பிரியன் ஓர் அழகான பெண்ணைத் தேர்ந்தெடுத்திருப்பதாகப் பாராட்டினாள். அவள் எவ்வளவுக் கெவ்வளவு வெளியில் சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாளோ அவ்வளவுக் கவ்வளவு அவள் மனத்துள்ளே பொறாமையும் குரோதமும் வேதனையும் உறுத்திக் கொண்டிருந்தது. அவள் மனத்திற்குள்ளேயே சதித் திட்டம் போட்டுக் கொண்டிருந்தாள்.

திருமணமாகி ஒரு வருடமான பிறகு மன்னன் தேவப்பிரியன் பகை நாட்டின் மீது படையெடுத்துப் போக நேர்ந்தது. அவன் போருக்குப் புறப்படுவதற்கு முன்னால் தன் பட்டத்து ராணியிடம் விடை பெற்றுக் கொள்ள வந்தபோது, "அரசே! தாங்கள் திரும்பி வரும்போது, நான் இரட்டைக் குழந்தைகளுக்குத் தாயாக இருப்பேன். தோட்டத்துப் பூக்களைப் போன்ற அழகான ஓர் இளவரசனுக்கும் ஓர் இளவரசிக்கும் நான் தாயாக இருப்பேன்'' என்று கோமளா பெருமையோடும் மகிழ்ச்சியோடும் கூறினாள்.

தேவப்பிரியன் அவளுடைய கன்னத்தில் அன்போடு முத்தமிட்டு, "நமக்குக் குழந்தைகள் பிறந்தவுடன் எனக்கு ஒரு தூதன் மூலம் செய்தியனுப்பு" என்று சொன்னான்.

ஒரு மாதத்திற்குப் பிறகு, ராணி கோமளாவுக்கு பூக்களைப் போன்ற அழகான ஓர் இளவரசனும், ஓர் இளவரசியும் இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்தார்கள். "அம்மா! என் கணவருக்கு இந்தச் செய்தியை ஒரு தூதன் மூலம் அனுப்பி வையுங்கள்!" என்று ராஜாவின் சிற்றன்னையான பானுமதியிடம் கோமளா கூறினாள்.

"அப்படியே செய்கிறேன்!" என்று பானுமதி உறுதி கூறினாள்.

பிறகு அவள் ஒரு தூதனை அழைத்து அவளிடம், “நீ ராஜாவிடம் சென்று ராணிக்கு ஒரு சிங்கக் குட்டியும் முதலையும் பிறந்திருப்பதாகச் சொல்லிவிட்டு வா. அவருடைய பதிலை என்னிடம் கொண்டு வந்து கொடு” என்று சொல்லியனுப்பினாள்.

தூதன் அவள் சொன்னபடியே செய்தான். ராஜா தேவப்பிரியன் போராடிக் கொண்டிருந்த இடத்திற்குச் சென்று, இந்தச் செய்தியைக் கூறினான். தன் மனைவியிடமிருந்து தான், அவன் செய்தி கொண்டு வந்திருக்கிறான் என்று எண்ணிய தேவப்பிரியன் ஆறாத் துயரமடைந்தான். அவன் முகம் துயரத்தால் வெளுத்தது.

“இது ஏதோ மாயாஜாலமாய் இருக்கிறது! இல்லாவிட்டால் எனக்குக் குழந்தைகளாகச் சிங்கக்குட்டியும் முதலையும் ஏன் பிறக்க வேண்டும்?” என்று நினைத்துக் கொண்டான். பிறகு அவன் தூதனைப் பார்த்து “நீ திரும்பிப் போய், ராணியிடம் நான் வரும் வரை இது சம்பந்தமாக எதுவும் செய்ய வேண்டாமென்று சொல்” என்று சொல்லி அனுப்பினான்.

தூதன் அரண்மனைக்குத் திரும்பி வந்து ராஜாவின் சிற்றன்னையிடம் இந்தச் செய்தியைக் கூறினான். அதைக் கேட்டு, பானுமதி அகமகிழ்ந்து அத்தூதனுக்கு பொன் முடிப்பு ஒன்றைப் பரிசாகக் கொடுத்து “செத்தாலும் இந்த ராஜ்யத்திற்குள் திரும்பி வராதே. வேறு எந்த நாட்டிற்காவது போய்விடு” என்று சொல்லியனுப்பி விட்டாள். பிறகு அவள் ராணி கோமளாவிடம் சென்றாள். கோமளா அப்போது தன் இரு குழந்தைகளையும் மடியில் வைத்து இன்பமாகக் கொஞ்சிக் கொண்டிருந்தாள்.

“ஐயோ! இந்த அநியாயத்தை என்னென்று சொல்வேன்!” என்று கூவிக் கொண்டே பானுமதி ஒரு சூழ்ச்சித் திட்டத்துடன் அங்கே வந்தாள். “ஐயோ பாவம் பெண்ணே, உன் செய்தியைக் கேட்ட அரசர்

என்ன பதில் அனுப்பியிருக்கிறார் தெரியுமா, ஐயோ! அதை எப்படிச் சொல்வேன். பூப்போல் அழகான இளவரசனையும் இளவரசியையும் நான் திரும்பி வருவதற்கு முன்னால் கடலில் மூழ்கடித்துக் கொன்று விடுங்கள் என்று சொல்லியனுப்பியிருக்கிறார். பாவிப்பெண்ணே! நீ இப்போது என்ன செய்யப் போகிறாய்?" என்று பானுமதி பாசாங்காகக் கூவிக் கூவி அழுதாள்.

கோமளா தன் இரண்டு குழந்தைகளையும் கட்டியணைத்துக் கொண்டு அழுதாள். கடைசியில் அவள் ஒருவாறு தெளிந்து "அவர் ராஜா! அவருடைய கட்டளையை மீறக் கூடாது!" என்று சொன்னாள். பிறகு அவள் எழுந்திருந்து பூக்களைப் போல் அழகாக இருந்த இளவரசனையும் இளவரசியையும் பொன்னாலாகிய பட்டுத் துணியொன்றில் சுற்றி ஒரு கூடையில் வைத்தாள். கடைசியாக ஒருதடவை இரண்டு குழந்தைகளுக்கும் முத்தமிட்டு விட்டுக் கண்ணில் நீர் வழிய வழிய ஒரு வேலைக்காரனைக் கூப்பிட்டு, அந்தக் கூடையைக் கொண்டு போய்க் கடலில் எறிந்து விட்டு வரும்படிக் கட்டளையிட்டாள். வேலைக்காரன் அந்தக் கூடையைக் கொண்டு போய்க் கடலில் எறிந்து விட்டுத் திரும்பிக் கூடப் பார்க்காமல் வந்து விட்டான்.

ஒரு மாதம் கழித்த பிறகு போர் முடிந்து ராஜா தேவப்பிரியன் தன் நாட்டிற்குத் திரும்பி வந்தான். கோட்டை வாசலில் அவனுடைய சிற்றன்னை பானுமதி நின்று அவனை வரவேற்றாள்.

"அம்மா! என் மனைவி எங்கே? அவளுக்குப் பிறந்த சிங்கக் குட்டியும் முதலையும் எப்படி இருக்கின்றன?" என்று கேட்டான் தேவப்பிரியன்.

"ஐயோ! மகனே! இது என்ன புதுமை! உனக்கு யார் இப்படிச் சொன்னார்கள்? அவளுக்குச் சிங்கக் குட்டியும் பிறக்கவில்லை; முதலையும் பிறக்கவில்லை. பூக்களைப் போன்ற அழகான ஓர் இளவரசனும், ஓர்

இளவரசியும்தான் பிறந்தார்கள். ஆனால், அவர்களைப் பெற்ற பொல்லாதவள் அப்பச்சைக் குழந்தைகள் இரண்டையும் ஒரு கூடையில் வைத்துக் கடலிலே விட்டெறிந்து விட்டுவரச் சொல்லிவிட்டாள்" என்று மிகவும் துயரப்படுபவள் போலச் சொன்னாள் சிற்றன்னை பானுமதி.

அதைக் கேட்டு ராஜா தேவப்பிரியன் மிகவும் கலக்கமடைந்து, "என் மனைவி எங்கள் குழந்தைகளைக் கொலை செய்து விட்டாள். நான் மறுபடியும் அவள் முகத்தில் விழிக்கப் போவதில்லை'' என்று வெறுப்போடு கூறினான். பிறகு அவன் தன் மனைவி கோமளாவை ஓர் அறையில் போட்டுப் பூட்டி வைக்கச் சொன்னான். என்ன இருந்தாலும் அவளைக் கொல்ல மனம் வராததனால் தான் அவன் அப்படிச் செய்தான். "அவள் பேச்சை மறுபடி என்னிடம் பேச வேண்டாம்!" என்று தன் சிற்றன்னையிடம் முழங்கினான்.

சிற்றன்னை பானுமதி தானடைந்த வெற்றியை நினைத்துச் சிரித்துக் கொண்டாள். மறுபடியும் அரண்மனைப் பொறுப்பையெல்லாம் ஏற்று நடத்துகின்ற தலைவியாகவும் நாட்டிலே மிக உயர்ந்த நிலையில் உள்ள ராஜமாதாவாகவும் உயர்ந்து விட்டாள்.

கடலில் எறியப்பட்ட சிறு குழந்தைகளான இளவரசனும், இளவரசியும் மூழ்கி விடவில்லை. அவர்கள் இருந்த கூடை கடலலைகளின் மீது மிதந்து மிதந்து கரையோரமாகவே வெகுதூரம் சென்று மீன் பிடித்துக் கொண்டிருந்த ஒரு செம்படவக் கிழவனின் கண்ணில் பட்டது.

அவன் அக்குழந்தைகளைத் தன் வீட்டிற்குத் தூக்கிக் கொண்டு போனான். அவன் தன் மனைவியை நோக்கி, "அடியே! இவ்வளவு நாளும் ஆண்டவன் நமக்கு ஒரு குழந்தையைக் கூடத்தரவில்லை. ஆனால் இப்போது நம் வயது முதிர்ந்த காலத்தில் இரட்டைக் குழந்தைகளை

அனுப்பியிருக்கிறார். இதோ பார்! தோட்டத்துப் பூக்களைப் போன்ற அழகுடைய ஒரு சின்னப் பையனும், ஒரு சின்னப் பெண்ணும் கிடைத்திருக்கிறார்கள்!" என்றான்.

அந்தச் செம்படவனும் அவன் மனைவியும் இரட்டைக் குழந்தைகளைத் தங்கள் சொந்தக் குழந்தைகளைப் போல் பாவித்து, அன்பு பாராட்டி வளர்த்து வந்தார்கள். இவ்வாறு ஏழு வருடங்கள் சென்றன. செம்படவனுக்கு வயது முதிர முதிர உடல் தளர்ந்து கொண்டு வந்தது. முன்னைப் போல் அவனால் அதிகமாக மீன்கள் பிடிக்க முடியவில்லை. அவன் மீன் பிடிப்பது குறைந்து விடவே மீன்களை விற்றுக் கிடைக்கும் வரும்படியும் குறைந்து விட்டது. அதனால் நான்கு பேர்களைக் காப்பாற்றப் போதுமான வருமானம் இல்லாமல் அவன் கஷ்டப்பட்டான்.

ஒருநாள் சின்ன இளவரசனும் இளவரசியும் செம்படவத் தம்பதிகளை நோக்கி, "அன்புள்ள அம்மா! நீங்கள் இந்த வயதான காலத்தில் எங்களுக்காகக் கஷ்டப்பட வேண்டாம். நாங்கள் எங்காவது போய்ப் பிழைத்துக் கொள்கிறோம்" என்று சொன்னார்கள்.

"குழந்தைகளே! உங்களுக்குப் போதுமான வயது வரவில்லை. நீங்கள் இப்போது போக வேண்டாம்" என்று செம்படவனும் அவன் மனைவியும் சொன்னார்கள்.

ஆனால் இளவரசனும் இளவரசியும் பிடிவாதமாகப் போக வேண்டுமென்று சொன்னதால் கடைசியில் முதியவர்கள் ஒப்புக் கொண்டார்கள். ஆனால் இரட்டைக் குழந்தைகள் வீட்டை விட்டு வெளியேறுவதற்கு முன்னால் செம்படவன் அவர்களை நோக்கி, "குழந்தைகளே! இப்போது நீங்கள் உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டியதுதான். நாங்கள் இருவரும் உங்கள் பெற்றோர்கள் அல்ல. ஏழாண்டுகளுக்கு முன்னால் கடலில் மிதந்து வந்த

ஒரு கூடையில் பச்சைக் குழந்தைகளாக நீங்கள் படுத்திருந்தீர்கள். பொன்னால் இழைத்த பட்டுத் துணியால் சுற்றி மூட்டப்பட்டிருந்த உங்களை நான் கண்டெடுத்தேன். அதன் பின் உங்களை என் சொந்தக் குழந்தைகளைப் போல் வளர்த்து வந்தேன். ஆனால் இன்று வறுமையின் கொடுமையினால் தான் உங்களைப் பிரிய ஒப்புக் கொள்ளுகிறேன்" என்று சொல்லிக் கண்ணீர் விட்டான்.

மறுநாள் காலையில் செம்படவனிடமும், அவன் மனைவியிடமும் சொல்லிக் கொண்டு இரட்டைக் குழந்தைகள் வீட்டை விட்டுப் புறப்பட்டார்கள். அவர்கள் இருவரும் கை கோர்த்துக் கொண்டு கடற்கரையோரமாக நடந்து சென்று கொண்டிருந்தார்கள். திடீரென்று சின்ன இளவரசி, "அண்ணா, கவனி! என் காதில் ஒரு குரல் கேட்கிறது" என்று சொன்னாள்.

உடனே அவர்கள் இருவரும் அந்த இடத்திலேயே நின்று கவனித்தார்கள். கடல் தான் அவர்களை நோக்கி பாடிக் கொண்டிருந்தது. "இளவரசே, இளவரசே, சின்ன இளவரசே! இளவரசி, இளவரசி, சின்ன இளவரசி! பூக்களைப் போல் அழகான பொன்னான குழந்தைகளே! செல்லுங்கள், செல்லுங்கள் நடந்து கொண்டே செல்லுங்கள்! ஆடுகின்ற மாம்பழமும், உண்மை அறிந்துரைக்கும் பறவை ஒன்றும் தெரிகின்ற வரை நீங்கள் சென்று கொண்டே இருப்பீரே!" என்று அந்தக் கடல் பாடியது.

அதன்படியே அவர்கள் இருவரும் நடந்து சென்று கொண்டேயிருந்தார்கள். மூன்று பகலும் மூன்று இரவுகளும் அவர்கள் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தார்கள். பிறகு களைப்பாறுவதற்காகக் கடற்கரை யோரத்திலிருந்த ஒரு மரத்தடியில் அவர்கள் தங்கினார்கள். கீழே படுத்திருந்த இளவரசி மேலேயிருந்த மரக்கிளைகளை நோக்கினாள். "அண்ணா அதோ பார்! இந்த மரத்தின் உச்சிக்கிளையில் ஒரு மாம்பழம் இருக்கிறது! இரத்தம்

போல் செக்கச் செவேலென்று பழுத்து அது எவ்வளவு அழகாகத் தொங்குகிறது பார்!'' என்று அவள் சொன்னாள்.

தன் தங்கை பசியோடு இருந்தபடியால், சின்ன இளவரசன் மரத்தின் மேல் ஏறி அந்த மாம்பழத்தைப் பறித்துக் கொண்டு வந்து அவளிடம் கொடுத்தான். ஆனால், அதை அவள் கடிக்கப் போகும் போது, ஒரு பறவை பறந்து வந்து இளவரசனுடைய தோளிலே உட்கார்ந்தது. ''சின்ன இளவரசியே! அதுதான் ஆடுகின்ற மாம்பழம். அதைத் தின்னாதே, உங்களை கடலில் தூக்கியெறிந்த கொடியவளை அந்த மாம்பழம் தான் காட்டிக் கொடுக்கப் போகிறது. அப்போது நான் உண்மையைச் சொல்லுவேன். அதுவரை நடந்து கொண்டேயிருங்கள். கடைசியில் நீங்கள் ஒரு கோட்டை சூழ்ந்த அரண்மனைக்குப் போய்ச் சேருவீர்கள். அங்கே போனவுடன் பிச்சை கேளுங்கள்!" என்று சொன்னது பறவை. அது தான் உண்மை அறிந்துரைக்கும் பறவை.

இளவரசனும், இளவரசியும் ஆடுகின்ற மாம்பழத்தையும் உண்மை அறிந்துரைக்கும் பறவையையும் எடுத்துக் கொண்டு நடந்து சென்று கொண்டேயிருந்தார்கள். கடைசியில் அவர்கள் கடற்கரையோரத்திலிருந்த ராஜா தேவப்பிரியனின் அரண்மனைக்கு வந்து சேர்ந்தார்கள். அரண்மனை கோட்டை வாசலில் வந்து நின்று அவர்கள் பிச்சை கேட்டார்கள்.

"இரண்டு சிறு குழந்தைகள் வாசலில் பிச்சை கேட்கிறார்கள்'' என்று சேவகர்கள் ஓடிவந்து ராஜாவிடம் கூறினார்கள்.

"அவர்களுக்கு வேண்டிய உணவு எல்லாவற்றையும் கொடுங்கள்'' என்று ராஜா தேவப்பிரியன் கட்டளையிட்டான்.

ராஜாவின் கட்டளைப்படி குழந்தைகள் இருவரும் சாப்பிட்டு முடிந்தவுடன், தாங்கள் ராஜாவை நேரில் பார்த்து நன்றி சொல்ல விரும்புவதாகத் தெரிவித்தார்கள். ராஜா அதற்கு அனுமதி கொடுத்ததும் அவர்கள் தர்பார் மண்டபத்திற்குள் அனுமதிக்கப்பட்டார்கள். அங்கே ராஜா தன் சிற்றன்னையுடன் சிங்காதனத்தில் உட்கார்ந்திருந்தான். அவன் அக்குழந்தைகளை இரக்கத்துடன் நோக்கினான். "சின்னக் குழந்தைகளே! இவ்வளவு சின்ன வயதில் நீங்கள் தன்னந்தனியாக உலகத்தில் அலைந்து கொண்டிருக்கிறீர்களே!" என்று ராஜா தேவப்பிரியன் பரிதாபத்தோடு கூறினான்.

"மேன்மை தாங்கிய மகாராஜா! எங்களுடைய வளர்ப்புத் தாய் தந்தையர் வயது முதிர்ந்த காலத்தில் வசதியாக வாழ வேண்டும் என்பதற்காகச் செல்வம் தேடிப் புறப்பட்டோம். ஏழு வருடங்களுக்கு முன்னால் நாங்கள் இருவரும் பொன்னாலிழைத்த பட்டுத் துணியில் சுற்றப்பட்டு ஒரு கூடையில் படுத்துக் கொண்டு கடலில் மிதந்தபோது எங்களைக் கண்டெடுத்தார்கள். அன்று முதல் அவர்கள் எங்களை அன்பாக வளர்த்தார்கள். இப்போது எங்களுடன் ஆடுகின்ற மாம்பழம் ஒன்றும் உண்மை அறிந்துரைக்கும் பறவை ஒன்றும் கொண்டு வந்திருக்கிறோம். எங்களைக் கடலில் தூக்கி எறிந்தவனை நாங்கள் காணும்போது இந்த மாம்பழம் அவனைக் காட்டிக் கொடுத்து விடும். இந்தப் பறவை உண்மையைச் சொல்லிவிடும்!" என்றார்கள்.

இதைக் கேட்ட ராஜாவின் உள்ளம் இளகியது; ஏழு ஆண்டுகளுக்கு முன்னால், பூக்களைப் போல் அழகான என் குழந்தைகள், ஒரு சின்ன இளவரசனும், ஒரு சின்ன இளவரசியும் அவர்களுடைய கொடிய தாயினால் கடலிலே தூக்கி எறியப்பட்டார்கள். அக்குழந்தைகள் தாம் நீங்கள் என்றால், உங்களிடம் இருக்கும் ஆடுகின்ற மாம்பழமும் உண்மை அறிந்துரைக்கும் பறவையும் உங்களைக் கொலை

செய்ய முயன்ற என் மனைவியைத் தெரிந்து கொண்டு விடும்.” என்று ராஜா தேவப்பிரியன் சொல்லி விட்டுத் தன் மனைவி கோமளாவைச் சிறைச் சாலையிலிருந்து அழைத்து வரச் செய்தான். கந்தலாடைகளுடன் முகம் வெளுத்துப் போய் ராணி கோமளா குடியானப் பெண்ணிலும் கேவலமாக நின்றாள்.

“மாம்பழம் ஆடட்டும்! பறவை உண்மையைச் சொல்லட்டும்!” என்றான் ராஜா தேவப்பிரியன்.

இரத்தம் போல் செக்கச் சிவந்த மாம்பழத்தைச் சின்ன இளவரசன், தன் எதிரில் இருந்த மேஜையின் மீது வைத்தான். அந்த மாம்பழம் மேஜையின் மேல் குறுக்கும் நெடுக்குமாகக் குதித்துக் குதித்து நடனமாடியது. அப்படியே ராஜாவின் சிற்றன்னையான பானுமதியின் தலைக்குத் தாவி அத்தலையின் மீது சிறிது நேரம் குதித்துக் குதித்து நடனமாடியது. பிறகு அது கண்ணுக்கு தெரியாமல் மறைந்து போய்விட்டது.

இதைக் கண்டு சிற்றன்னை பானுமதி பயந்து அலறினாள். “இது உண்மையல்ல. உன் குழந்தைகளைக் கொலை செய்தவள் அதோ நிற்கிறாள்!” என்று சொல்லிக் கந்தலாடையுடன் நின்று கொண்டிருந்த கோமளாவைச் சுட்டிக் காட்டினாள்.

ஆனால் உண்மையுணர்ந்துரைக்கும் பறவை தெள்ளத் தெளிய உண்மையை விளக்கிச் சொல்லியது. “மகாராஜா! இதோ உட்கார்ந்திருக்கும் உங்கள் சிற்றன்னை தான் உங்கள் அருமை மனைவியின் மீது பொறாமை கொண்டு வெறுத்தாள். அவள்தான் இக்குழந்தைகளைக் கடலில் தூக்கி எறியும்படி செய்தாள்” என்று சொல்லி, சிற்றன்னை பானுமதி செய்த சூழ்ச்சிகளையெல்லாம் முதலிலிருந்து கடைசிவரை விவரமாகத் தெரிவித்தது. அதன் பின் அது மறைந்து போய் விட்டது. உடனே சிற்றன்னை பானுமதி பயத்தினால் உடலெல்லாம் நடுநடுங்கி

வியர்த்துக் கொட்ட, எழுந்து நின்று தன் குற்றத்தை ஒப்புக் கொண்டாள். மன்னிக்க வேண்டும் என்று மன்றாடிக் கேட்டுக் கொண்டாள்.

"உனக்கு எப்படி மன்னிப்புக் கொடுக்க முடியும்?" என்று கேட்டான் ராஜா தேவப்பிரியன்.

தன் சிற்றன்னையைப் பார்க்க பிடிக்காமல் முகத்தைத் திருப்பிய ராஜா, அங்கே தன் அன்பு மனைவி கோம்ளா நிற்பதைக் கண்டான். உடனே சிங்காதனத்தைவிட்டு எழுந்து ஒடி அவளை அன்போடு பற்றிக் கொண்டான். பிறகு இருவரும் தங்கள் இரண்டு குழந்தைகளையும் தூக்கித் தோள் மேல் வைத்துக் கொண்டு முத்தமிட்டுக் கொஞ்சிக் கொஞ்சி மகிழ்ந்தார்கள். அவர்கள் நான்கு பேரும் அடைந்த இன்பத்திற்கிடான இன்பத்தை இந்த உலகத்தில் வேறு யாரும் அடைந்திருக்கவே முடியாது.

ராஜா தேவப்பிரியன் தன் சிற்றன்னையைத் "திரும்பி வராதே" என்று சொல்லிக் கோட்டையை விட்டு விரட்டி விட்டான். அவளுடைய அதிகாரமும் ஆடம்பரமும் அடியோடு அழிந்து போயிற்று!

தன் குழந்தைகளை அன்போடு ஏழு ஆண்டுகள் ஆதரித்து வளர்த்த செம்படவக் கிழவனையும், அவன் மனைவியையும் அரண்மனைக்குக் கூட்டிக் கொண்டு வந்து அவர்கள் காலம் முழுவதும் அங்கேயே வசதியாக வாழ்ந்து வரும்படிச் செய்தான் ராஜா.

பூக்களைப் போன்ற அழகுடைய சின்ன இளவரசனும் சின்ன இளவரசியும் தங்கள் பெற்றோர்களுடனும் வளர்ப்புத் தாய் தந்தையருடனும் ஆனந்தமாக வாழ்ந்தார்கள்.

முற்றிற்று.

## பிரேமா பிரசுர வெளியீடுகள்

### சிறுவர் கதைப் பெட்டகம்

| | |
|---|---|
| ஒட்டுக்குடுமி பட்டுசாமி | 18 00 |
| மர்மக் குதிரைகள் | 18 00 |
| டமாரக் குட்டி | 20 00 |
| சின்னஞ்சிறு தேவதை | 20 00 |
| நான்கு மேதாவிகள் | 15 00 |
| நீளமூக்கு நெடுமாறன் | 18 00 |

### கதைகள்

**விக்கிரமாதித்தன் கதைகள்**

வடமொழி மூலங்களைப் பரிசோதித்து, இதுவரை தமிழில் வெளிவராத பல புதிய கதைகளும் உணர்ச்சியோட்டம் மிக்க புதுமைத் தமிழில் அழகான சித்திரங்களுடன் தரப்பட்டுள்ளன.

பக்கங்கள் 600 — விலை ரூ. 78-00

**வேதாளம் சொன்ன கதைகள்**

விக்கிரமாதித்தன் புத்திசாதுரியத்தை பரிசோதிக்க வேதாளம் சொன்ன கதைகள்.

பக்கங்கள் 96 — விலை ரூ. 20-00

**மதனகாமராஜன் கதைகள்**

மதனகாமராஜன் கதை, எத்தனை முறை படித்தாலும் - சுவை குறையாத ஒரு விருந்தாகும்.

பக்கங்கள் 348 — விலை ரூ. 70-00

**கதைக்கடல்**

கவி சோமதேவ பட்டரின் இக்கதைக் கடல். படிக்கச் சுவையானது. சிந்தனைக்கு ஒரு விருந்து. பகுத்தறிவுக்கு ஒரு பாசறை. தத்துவங்கள் நிறைந்தது.

பக்கங்கள் 420 — விலை ரூ. 75-00

**திராவிட நாட்டுக் கதைகள்**

இந்த புராதன நாடோடிக் கதைகளே இன்றைய சிருஷ்டி கர்த்தாக்களுக்கும் அரியதொரு கற்பனைக் களஞ்சியமாக இருந்து வருகிறது.

பக்கங்கள் 464 — விலை ரூ. 75-00

**குரங்கு மாமுனிவர் கதைகள்**

குரங்கு அரசனின் வீரசாகசங்கள் நிறைந்த சீன தேசத்து பழம்பெருங் கதை.

பக்கங்கள் 264 — விலை ரூ. 35.00

**பீர்பால் கதைகள்**

நகைச்சுவை மிளிரும் நயமான பேச்சுக்களிடையே வாழ்க்கையின் ஆழ்ந்த பேருண்மைகளை விளக்கிக் காட்டிய விகடகவி பீர்பால்.

பக்கங்கள் 64 — விலை ரூ. 10-00

**ஹாத்திம் தாய்**

ஏழு விதச் சவால்களுக்கும் பதில் கண்டுபிடித்து வரக் கிளம்பிய ஹாத்திம் தாயின் வரலாறே இந்தப் பாரசீகப் பெருங்கதை.

**பக்கங்கள் 424** **விலை ரூ. 80-00**

**பாட்டி சொன்ன கதைகள்**

1001 இரவில் சொன்ன அரபுக் கதைகள் போலவே 1001 பகலில் சொன்ன இந்த பாட்டி சொன்ன கதைகளிலும் கதைக்குள்ளே கதை,

**பக்கங்கள் 480** **விலை ரூ. 80-00**

**போதிசத்துவர் கதைகள்**

புத்தர் காலத்திய பாலி மொழியிலுள்ள நூலின் வழியிலிருந்து முதன் முதலாகத் தமிழ் மொழியில் வெளியிடப்பட்டுள்ளது.

**பக்கங்கள் 524** **விலை ரூ. 100-00**

**ஈசாப் கதைகள்**

தித்திப்பான தேனில் உடலுக்கு உரமூட்டும் காரமான மருந்துகளை குழைத்துத் தரும் மருத்துவனைப் போல விறுவிறுப்பான கதைகளிடையே அறிவுரைகளை போதிக்கும் பொக்கிஷம்.

**பக்கங்கள் 136** **விலை ரூ. 25-00**

**தெனாலிராமன் கதைகள்**

தன் வேடிக்கை விளையாட்டுகளினால் தோன்றிய அரசனின் கோபங்களிலிருந்து விடுபட்டு அவ்வரசனையே தன் வசப்படுத்தும் புத்திசாதுரியம் கொண்ட தெனாலிராமனின் கதைகள் படிப்பவர்களின் கவலைகள் மறக்கும்படி செய்யக் கூடியது.

**பக்கங்கள் 56** **விலை ரூ. 10-00**

**மரியாதைராமன் கதைகள்**

சிறுவயதிலேயே அரசனால் நீதிபதியாக்கப்பட்ட மரியாதை ராமனின் தீர்ப்புகள் அவரது மதி நுட்பத்தை பறை சாற்றுகின்றது.

**பக்கங்கள் 56** **விலை ரூ. 10-00**

**இராயர் அப்பாஜி கதைகள்**

ஒரு அரசனுக்கு இன்றியமையாதது எது! மதி நுட்பம் நிறைந்த அமைச்சரே - இதை நிரூபித்து இருக்கிறார் கிருஷ்ண தேவராயரின் அந்தரங்க அமைச்சரான அப்பாஜி!

**பக்கங்கள் 80** **விலை ரூ. 15-00**

**சிந்தைக்கு விருந்தாகும் குட்டிக் கதைகள்**

உடல் சௌகரியங்களுக்காக வாழ்க்கையின் பெரும் பகுதியை கழிக்கும் நாம் நமது சிந்தைக்கும் விருந்தளிக்க வேண்டும்.

**பக்கங்கள் 160** **விலை ரூ. 25-00**

**அவந்தி சுந்தரி கதை**

மகாகவி தண்டி எழுதிய தசகுமார சரிதம் என வழங்கி வரும் இந்த அவந்தி சுந்தரி கதை, கதைக்குள் கதையாக அமையப் பெற்றது.

**பக்கங்கள் 224** **விலை ரூ. 30-00**

**பிரேமா பிரசுரம்™**

59, ஆற்காடு சாலை, கோடம்பாக்கம்,
சென்னை - 600 024. தொலைபேசி : 24800325, 24833180
Fax : 044-24811755 E-mail : aruram@md2.vsnl.net.in.
Website: www.premapirasuram.com

